# உறுதியும் வேகமும் உள்ள ஹெர்குலிஸ் சைக்கிளில் சவாரி செய்யுங்கள்

TI/CH-7678R



உண்மை! ஹெர்குலிஸ் சைக்கிளை அதிக பாரத்தை தாங்கும் அமைப்புகளுடன் உறுதியாக உருவாக்கியுள்ளோம். உதாரணமாக உறுதியான எஃகுக் குழாய்களாலான அதன் ஃபிரேம், வலுவேற்றிய எஃகு செயின், இலகுவாக ஓட்டும் வகையில் ஃப்ரீ-வீல், சிறப்பான பிடிமானத்துக்கும் சுலபமாக பிரேக் பிடிக்கவும் தகுந்த வகையில் சரியான வளைவுகளுடன் கூடிய ஹாண்டில் பார்.

ஹெர்குலிஸின் ஒவ்வொரு பகுதியும் இலகுவான சவாரிக்கு ஏற்ற வகையில் விஞ்ஞான முறைப்படி அமைக்கப்பட்டது.





டிஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை 600053

உங்கள் பணியில் 25 ஆண்டுகள் — 1949-1974

# ஹெர்குலிஸ்

—உலகிலேயே உறுதியான சைக்கிள்.

# பொங்கல் திருநாள் சிறக்க... ராசி!





பட்டுப் புடவைகள்,
பட்டு வேஷ்டிகள்,
கைத்தறி நூல் சேலைகள்,
ரெடிமேட் ஆடைகள்!
புதிய டிசைன்கள்!
புதிய வண்ணங்கள்!



ராதா சில்க்கின்
ராசி உன்னத
வாழ்வுக்கு ஆசி

**ராதா சில்க் எம்போரியம்**
சென்னை-600004



சார்பு நிறுவனம்
**ராதா சில்க்ஸ்**
'தன்பில்டிங்ஸ்', மவுண்ட் ரோடு,
சென்னை-600002

பம்பாய் கிளை
**ராதா சில்க் எம்போரியம்**
29, கோவிந்த் மஹல்;
86-B, மரைன் டிரைவ், G. ரோடு
பம்பாய்-400002

EP-RASI-95

# சங்கீதச் சிரிப்பு!

கச்சேரி ஆரம்பிக்கலாமா?

பிடில் சாஸ்திரி அவர்கள் வர வில்லையே!



சாஸ்திரிகள் வரலேன்னு என்ன! அந்த இடத்தில் ஒரு கூர்ச்சத்தைப் போட்டுவிட்டு ஆரம்பிச் சுடலாமே!



அதோ சாஸ்திரி அவர்களே வந்து விட்டாரே!

உம்... கூர்ச்சமே இருக்கட்டுமே!





மிருதங்கக்காரர்: நான் கொஞ்சம் 'தனி' வாசிக்கலாமா?
வித்வான்: எப்பவுமே நீ தனியாகத் தானே வாசிச்சிண்டிருக்கே!

"சே! மாலையில் சங்கீதக் கச்சேரிக்குப் போறதுல் எல்லோரும் சளசளன்னு பேசறா!"

"சரி! நாழியாச்சு நான் வரேன் காலையில் சங்கீதத்தைப் பத்திப் பேச என்னைக் கூப்பிட்டிருக்கா!"



"இந்த ஸீஸனில் ஐந்து சான்ஸ் உமக்குக் கிடைச்சிருக்காமே, எப்படி?"

"ஒரு கச்சேரியிலே பாடறேன்! மற்றொரு கச்சேரியிலே மிருதங்கம் வாசிக்கிறேன்! வேறொன்றில் பிடில் வாசிக்கிறேன்! மற்றும் ஒன்றில் கஞ்சிரா சான்ஸ் இன்னொன்றில் கடம் வாசிக்கிறேன்!"






சாமா

பா..ஆ..தா...

வெள, வெள, வெள..

தா, தத, தா, பி, பி..

கண, கண..! கச்சேரிக்கு
ஏறுவதற்குப் பதிலா
ஜில்லிப்பு ஏறிண்டிருக்கு!
யாரானும் போய் அந்த
ஏர்கண்டிஷனை நிறுத்திட்டு
வாங்கோளேன்!














அன்பான கடவுளே,

நீ இல்லேன்னு சொல்லிண்டிருக்கிறவங்களோட நீ "டூ" போட்டுடறயாமே? நான் அப்படிச் சொல்லலே. நேக்கு ஒன்னை ரொம்பப் பிடிக்கும்.

சின்னப் பையன்,

தம்பி.







# சில துண்டுக் காகிதங்கள்... தூக்கியெறிய முடியாதவை.

காரணம்... அவற்றிலே காவியங்கள் புதைந்திருக்கும். அதோடு, இன்றைய காகிதப் பஞ்சத்தில், ஒவ்வொரு துண்டுக் காகிதமும் ஒரு கோடி பெறும்.

ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்லில், நாங்கள் ரீம் கணக்கில் காகிதம் தயார் செய்கிறோம்... எழுத, அச்சடிக்க, பொருட்களைப் பொதிந்து கட்ட என்று. ஆயின், அது எந்த மூலைக்கு? எங்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்காக, ஒரு குறுகிய கால திட்டம் வகுத்துக் கொண்டு, அசுர கதியில் அதிகப்படி வேலை செய்து வருகிறோம்.

ஓரளவு காகித பஞ்சத்தைக் குறைக்க இது உதவும்—மகிழ்ச்சியான செய்தியில்லையா இது? காகிதம் இல்லாத வாழ்வில் வேடிக்கையும் விளையாட்டும் ஏது?



ஆந்திரப் பிரதேஷ் பேப்பர்

ரெஜிஸ்டர்டு ஆபீஸ் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.) பம்பாய் ஆபீஸ்: ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், ஹஸாரிமால் ஸோமானி மார்க்
ஹைதராபாத் ஆபீஸ்: 1-2-33/2, மதுபன், கன்மஹால் ரோடு.

ஏகபோக விற்பனையாளர்: பின்னி லிமிடெட், 24, லிங்கி செட்டித் தெரு, மதராஸ்-1.

# கல்கி

ஆனந்த, கார்த்திகை, 30 □ டிசம்பர், 15, 1974

## இன்னிசைச் சிறப்பிதழ்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

இசை விழாக்கள் ஜாம் ஜாம் என்று ஆரம்பமாகி அமர்க்களமாய் நடக்கப் போகின்றன. இந்தத் தருணத்தில் இன்னிசைச் சிறப்பிதழைக் கலாதேவியின் பாத கமலங்களில் சமர்ப்பிக்கிறோம்.

நேற்று, இன்று, நாளை என்று வகுத்துக்கொண்டு, நேற்று பிரபலமாயிருந்தவர்கள் இன்று பிரபலமாயிருப்பவர்கள், நாளை முன்னணிக்கு வரப்போகிறவர்கள் என்று பலதரப்பட்ட வித்வான்கள், பாடகிகள் பற்றிய ரசமான தகவல்களைச் சேகரித்து இந்த இதழில் வழங்குகிறோம்.



கணக்கில் அடங்காத வீச்சும் ஆழமும் கொண்டது சங்கீத சாகரம். அதில் ஒருசில துளிகளை மட்டுமே இந்த இதழில் காண்கிறீர்கள். இந்த இதழில் குறிப்பிடப்படாத எத்தனையோ சிறந்த கலைஞர்கள் சங்கீத உலகுக்கு அரும்பணியாற்றி வந்ததையும் வருவதையும் நாங்கள் உணர்ந்திருக்கிறோம். காகிதக் கட்டுப்பாட்டின் விளைவான இட நெருக்கடி, விரிவாக எல்லோரையும்பற்றி எழுதி வெளியிட நம்மை அனுமதிக்கவில்லை.

எழுதப்பட்ட விஷயங்களின் சுவை, இனி எழுதப்பட வேண்டிய அம்சங்களை ஆர்வத்துடன் எதிர்நோக்கத் தூண்டுதலாய் அமையட்டும்.

— ஆசிரியர்.


| சந்தா விவரம் | | | | | |
|---|---|---|---|---|---|
| இந்தியா | ஒரு வருடம் | ரூ. 30-00 | ஆறு மாதம் | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ,, | ரூ. 60-00 | ,, | ரூ. 30-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ,, | ரூ. 44-00 | ,, | ரூ. 22-00 |



உம்மிடியார்ஸ் ஜுவல்லரீஸ்

உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸில்

போக்கிஷப் பெட்டகம் அழைக்கிறது!




மாசற்ற வைரங்கள், மின்னும் நவரத்தினங்கள், திறனுடன் சமைக்கப்பட்ட தங்க நகைகள், வெள்ளி வேலைப்பாடுகள். பழமைப் பொலிவும், புதுமைப் படைப்பும் ஒருங்கே சேர்ந்தது.

உங்கள் மேலான வரவைத் தந்து தேவையைத் தேர்ந்தெடுங்கள்.

உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்



40, பாண்டி பஜார், மாம்பலம், சென்னை-600017 போன்: 442500

• ஞாயிற்றுக்கிழமை கடை திறந்திருக்கும் • செவ்வாய்க் கிழமை விடுமுறை

• ரேமான் போனஸ் ஸ்டாம்புகள் அளிக்கப்படும்.

# அபார யோசனை!

**மா**ணவர்கள் அரசியலில் இப்போது பங்கெடுத்துக் கொள்வது போதாதாம்; இன்னும் தீவிரமாக ஈடுபட வேண்டுமாம்! இன்றைய மாணவர் கிளர்ச்சிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க இதுதான் வழியாம்! மத்திய அரசு அமைத்த ஓர் ஆய்வுக் குழுவின் தீர்ப்பு இது. இக் குழுவின் தலைவரோ இன்று மத்திய கல்வி அமைச்சராகவே விளங்குகிறவர்!

ஆண்டவனே! மாணவர் சமுதாயத்தை இத்தகைய மேதாவி களிடமிருந்து நீதான் காப்பாற்ற வேண்டும்!

எல்லா மாணவர்களும் இன்றைய அரசியல் பொருளாதார சமுதாயப் பிரச்னைகளை அறிந்திருக்க வேண்டும்; ஜனநாயகப் போக்கு களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால் அது ரொம்ப சரி.

ஆனால் மாணவர்கள் கட்சி அங்கத்தினர்களாகவே ஆகிவிட வேண்டும்; அரசியலில் நேரடியாகப் பங்கேற்க வேண்டும் என்றால் அதனைச் சுயநலவாதிகளின் சூழ்ச்சி என்றே வர்ணிக்கலாம்.

போனால் போகிறது என்பது போல் இந்த ஆய்வுக் குழு கட்சிக் காரியாலயங்கள், கல்லூரிகளில் இயங்க வேண்டாம் என்று விட்டுக் கொடுத்திருக்கிறது. அடடா! இவர்களின் கருணையே கருணை!

கல்கி

மலர் 34

இதழ் 20



தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா— பாரதியார்

# அம்பலமான ஊழல்!

**இ**ன்று அம்பலத்துக்கு வந்து அமர்க்களப்படும் லைசென்ஸ் ஊழல் விவகாரத்தில் மத்திய அரசு நடந்து கொண்ட விதம் வெட்கக் கேடு. ரகசிய விசாரணை பற்றிய ஸி. பி. ஐ. அறிக்கையைப் பாராளு மன்றத்தில் சமர்ப்பிப்பதாக உள்துறை அமைச்சர் வாக்களித்திருந் தார். மந்திரி சபை மாற்றங்களுக்குப் பிறகு வந்த புதிய உள்துறை அமைச்சரோ அவசரம் அவசரமாக வழக்கை நீதிமன் றத்துக்குக் கொண்டுபோய்விட்டுக் கையை விரித்தார். வழக்கு நீதிமன்றத்தில் இருக்கும்போது ஸி. பி. ஐ. அறிக்கையைப் பாராளு மன்றத்தில் சமர்ப்பிப்பதும் விவாதிப்பதும் தவறு என்று கூறி நழுவப் பார்த்தார். சபாநாயகர் தம் பக்கம் பேசுவார் என்று எதிர் பார்த்த பிரும்மானந்த ரெட்டிக்குப் பெரிய ஏமாற்றம்.

திரு மொரார்ஜி தேசாய் பாராளுமன்றத்துக்குள்ளேயே சத்யாகிரஹம் செய்வேன் என்று ஆரம்பித்த பிறகு சிறிது விட்டுக் கொடுக்க முன்வந்திருக்கிறது அரசு. அறிக்கை மீது விவாதம் நடத்துவதில்லை என்று வாக்குத் தந்தால் உறுப்பினருக்கு அறிக்கை யைப் பரிசீலிக்க வாய்ப்பளிப்பதாகச் சொல்கிறது. இதுவும் முழுத் திருப்தி அளிக்காது, நிச்சயம்.

இவ் விஷயத்தில் பிரும்மானந்த ரெட்டி நடந்து கொண்ட விதம் பிரும்மானந்தம் என்ன, வெறும் ஆனந்தம் அளிப்பதாகக்கூட இல்லை. ஒரே விசனம்தான்!

# நல்லெண்ணம் நீடிக்கட்டும்!

**கா**விரி நீரைப் பங்கிட்டுக் கொடுக்கும் பொறுப்பு ஓர் உயர் மட்டக் குழுவினிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இது மூன்று ராஜ்யங்களுக்கும் தேவைகளை நிர்ணயித்துச் சிக்கனமான முறையில் நீரைப் பயன்படுத்த யோசனைகளையும் கூறும். அரசியல் கலப்பற்ற முறையில் நிபுணர்கள் அடங்கிய குழுவாக இது அமையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மூன்று மாநிலங்களின் பிரதிநிதிகளும் இதில் அங்கம் வகிப்பர். இத்தகைய நல்ல முடிவுக்கு வந்த கேரள, கர்நாடக, தமிழக முதல்வர்களைப் போற்றுகிறோம். சம்பாப் பயி ருக்கு நீர் தட்டுப்பாடின்றி உடனடியாகக் கபினி நீரை விட இசைந்த கர்நாடக முதல்வரை விசேஷமாக வாழ்த்துகிறோம். இதே போன்ற நல்லெண்ணமும், சகோதர பாசமும் நீடிக்கட்டும். அப்படி நீடிப்ப தன் மூலம் கேரளத்தில் வீணாகிக் கொண்டிருக்கும் நதிகள் நீர் தமிழகத்துக்குப் பயனாகவும் நல்லதொரு திட்டம் பிறக்கட்டும்.

# இசைவிழாத் தலைவர்கள்


அனந்தகிருஷ்ண சர்மா


திருவீழிமிழலை


செம்மங்குடி

## சங்கீத கலாநிதி

மியூசிக் அகாடெமியின் மதிப்புமிக்க விருதினைப் பெறும் விற்பன்னரான ராள்ளபள்ளி ஸ்ரீ அனந்தகிருஷ்ண சர்மா, பிரசித்திபெற்ற மைசூர் வித்வான் பிடாரம் கிருஷ்ணப்பாவிடம் சிட்சை பெற்றவர். சாரீரம் பழுதுற்றதால் கல்லூரியில் தெலுங்கு விரிவுரையாளராகத் தொழில் மேற்கொண்டார். ஆனால் ஆத்மார்த்தமாக இசையில் ஈடுபட்டார். ஆய்வுகள் செய்தார். அகாடெமி நிபுணர் கூட்டங்களில் கலந்து கொண்டார். திருப்பதியில் செப்பேடுகளில் தேய்ந்து கிடந்த அன்னமாசாரியாரின் நூற்றுக்கணக்கான பாடல்களைப் பெயர்த்தெழுதி, சுத்தப்படுத்தி வெளியிட்டார்.

பாரதியாரால் கீதமிசைப்பதற்கு எடுப்பானது எனச் சிறப்பிக்கப்படும் சுந்தரத் தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டு, கர்நாடக இசையின் பிதாமகரான புரந்தர தாசரின் கன்னட தேசத்தில் வாசம் செய்து வரும் ஸ்ரீ அனந்தகிருஷ்ண சர்மாவைத் தமிழகத்தின் தலையாய சங்கீத நிறுவனம் கௌரவிப்பது இசை மூலம் உண்டாகும் இசைவுக்கும் பாராட்டாகிறது!

## சங்கீத கலா சிகாமணி

செம்மங்குடி அவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? மேடை ஏறிய நாளிலிருந்து இன்று வரை சிகர ஜோதியாகவே ஜொலித்து வருகிறார். அரியக்குடி தலைமுறையில் தொடங்கி, ஜி. என். பி. தலைமுறை வழியாக, பாலமுரளி தலைமுறையிலும் குன்றாத புகழுடன் போடு போடு என்று போட்டு வருகிறார். மனோதர்மக் கலைஞராகவும் இருக்கிறார், சிறிய ஆராய்ச்சியாளராகவும் இருக்கிறார். பண்டிதரை வியக்க வைக்கிறார், பாமரரைப் பரவசப் படுத்துகிறார். நாதநாமக்கிரியாவினால் இதயத்தைப் பிழிந்தெடுக்கிறார் என்றால், பல்லவி ஸ்வரத்தில் ரூலையைக் கிளுகிளுக்க வைக்கிறார். புகழ் கொண்ட ஏராளமான சீடர் குழாத்தைப் பெற்றிருப்பது அவரது தனிப் பெருமை. இந்த நூற்றாண்டு கண்ட மகா வித்வான்களில் ஒருவராக சங்கீத சரித்திரத்தில் நிரந்தர இடத்தைப் பெற்றுவிட்ட ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யரவர்களுக்கு விருது சூட்டிப் பெருமை கொள்ளும் இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டிக்கு நம் வாழ்த்துக்களை அளிக்கிறோம்.

## இசைப் பேரறிஞர்

திருவீழிமிழலை திரு சுப்பிரமணியப்பிள்ளை சங்கீதத்தின் பத்ததி, ஒழுங்கு, தனி வாழ்வின் ஷ்டாசார ஒழுங்கு இவற்றைப் பாரம்பரியமாகப் பெற்ற கலைஞர். தமிழகத்தின் தனிச் சிறப்பான நாதஸ்வரத்தில் சிறந்து, ஆண்டவனின் திருவீதி உலாக்கள், கல்யாண ஊர்வலங்கள், சபை மேடைகள் என்று நாடெங்கும் கம்பீரமான இசையைப் பரப்பி வந்திருக்கிறார். தியாகையரிடம் விசேஷ ஈடுபாடு கொண்டு திருவையாற்றில் அருந்தொண்டு புரிந்திருக்கிறார். அதே போல் தேசாபிமானத்திலும் தீவிரமாக இருந்திருக்கிறார். நாயனங்களில் எப்போதும் 'இரட்டை'க்குத் தனிக் களை உண்டு. அவ்விதத்தில் திரு சுப்பிரமணியப்பிள்ளை அவர்களுக்கு இணை பிரியா ஜோடியாக விளங்கும் தம்பி திரு நடராஜசுந்தரம் அவர்களுக்கும் தமையனாரின் புகழில் கணிசமான பங்கு உண்டு. சுப்பிரமணியப்பிள்ளையின் தமிழிசைச் சங்கத் தலைமையால் இசையுலகு நற்பயன் பெறும்.

ராஜாஜி சிந்தனை

### எல்லோருக்கும் இன்பம்

எந்த நல்ல திட்டமானாலும் அதனால் ஒரு கட்சியார் தங்களுக்குக் கஷ்டம் வந்ததாகவே நினைக்கும் படியாகிறது. தொழிலாளிகளுக்கு நல்லது செய்தால் முதலாளிகளுக்கு மனஸ்தாபமாகிறது. உழவனுக்கு நல்லது செய்தால் பண்ணையாருக்குக் கஷ்டமாகிறது. இவற்றையே மாற்றியும் சொல்லலாம். சர்க்கார் காரியங்களில் மட்டுமில்லாமல் எல்லா விஷயங்களிலும் இது ஒரு பிரகிருதி தர்மம் மாதிரி நடக்கிறது. ஆஸ்திகம் விருத்தியானால் நாஸ்திகர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆக எந்த நல்லதானாலும் ஒரு கட்சியார் பாதிக்கப்படுகிறார்கள். இப்படி ஒரு கட்சியாருக்கும் கஷ்டம் தராமல் எல்லாருக்கும் சந்தோஷம் தருகிற ஒன்று உண்டென்றால் அது சங்கீதம்தான். மற்றவற்றில் ஒருவருக்கு நல்லது செய்ய வேண்டுமானால் இன்னொருவருடைய சொத்து அல்லது கொள்கையைப் பாதிக்கும்படியாகக் காரியம் செய்ய வேண்டியிருக்கிறது. சங்கீதத்தில் எவருடைய சொத்துக்கும் கொள்கைக்கும் ஹானி இல்லை. ஒருத்தருக்கும் துன்பம் தராமல் எல்லோருக்கும் இன்பம் தருகிற ஒரே சாதனமாக இருக்கிறது சங்கீதம்.

# சங்கீத லட்சியம் சாந்தமே

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
சுவாமிகள்

லோகத்தில் மனசுக்கு ரொம்பவும் ஆனந்தமாகவும் சாந்தமாகவும் இருக்கப்பட்ட பல விஷயங்களை அப்பர் ஸ்வாமிகள் ஒரு பாட்டில் சொல்கிறார். இந்திரியங்களுக்கு அகப்படுகிற சுகங்கள் போல இருந்தாலும் நிரந்தரமான, தெய்விகமான ஆனந்தத்தைத் தருகிற வஸ்துக்களைச் சொல்கிறார். அந்த வஸ்துக்கள் என்ன? முதலில் துளிக்கூட தோஷமே இல்லாத வீணா கானம்; அப்புறம் பூரண சந்திரனின் பால் போன்ற நிலா; தென்றல் காற்று; வசந்த காலத்தின் மலர்ச்சி; வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டிருக்கிற தாமரைத் தடாகம்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

இந்திரியங்களால் பெறுகிற இன்பங்களை உபமானமாக அடுக்கும்போது "மாசில் வீணை" என்று சங்கீதத்துக்கே முதலிடம் தருகிறார்.

நல்ல சங்கீதம் — அதுவும் குறிப்பாக சங்கீதத்துக்கு எடுத்த வீணையோடு கானம் — என்றால் அது ஈசுவரனின் பாதத்துக்குக் கொண்டு சேர்ப்பதாகவே இருக்கும். நம் பூர்விகர்கள் இசையை ஈசுவரனின் சரணங்களிலேயே சமர்ப்பணம் பண்ணினார்கள். அந்த இசை அவர்களையும், அதைக் கேட்கிறவர்களையும் சேர்த்து, ஈசுவர சரணாரவிந்தங்களில் லயிக்கச் செய்தது. தர்ம சாஸ்திரம் தந்த மகரிஷி யாக்ஞவல்கியரும் "சுஸ்வரமாக வீணையை மீட்டிக்கொண்டு, சுருதி சுத்தத்தோடு லயம் தவறாமல் நாதோபாஸனை செய்துவிட்டால் போதும்-தியானம், யோகம், தபஸ், பூஜை என்ற கஷ்டமான சாதனைகளே வேண்டாம் — இதுவே மோக்ஷத்துக்கு வழிகாட்டிவிடும்" என்கிறார். இதிலே இன்னொரு விசேஷம், சங்கீத சாதகன் மட்டுமில்லாமல், அவன் கானம் செய்வதை வெறுமே கேட்டுக் கொண்டிருக்கிற அத்தனை பேருக்கும் அவன் ஒருத்தன் செய்கிற சாதனையின் பூரண பலனை நிறைந்த திவ்விய சுகம் கிட்டிவிடுகிறது.

வித்யா தேவதையான சரஸ்வதி எப்போதும் வீணா கானம் செய்கிறாள். லௌகிகமான (Secular) பாட்டே கூடாது, பகவானைப் பற்றித்தான் பாடவேண்டும். சரஸ்வதியும் பரமேசுவரனின் லலித லீலைகளைப் பற்றித்தான் பாடுகிறாள். ஆசாரியாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் அம்பாளின் கழுத்தழகைச் சொல்லும்போது, அவளிடமிருந்தே சங்கீதம் முழுதும் பிறக்கிறது என்பதை வெகு அழகாகச் சொல்லுகிறார். ('கலே ரேகா: திஸ்ரோ' என்று ஆரம்பிக்கும்.) கழுத்திலே மூன்று ரேகைகள் இருப்பது உத்தம ஸ்திரீ லட்சணம். புருஷ லட்சணம் Adam's apple என்று இங்கிலீஷில் சொல்கிற, நெஞ்சிலே இருக்கப்பட்ட உருண்டையான புடைப்பு. ஈசுவரன் ஆலகாலத்தைத் தொண்டையில் கோலிக் குண்டு மாதிரி அடக்கிக் கொண்டார் அல்லவா? ஆண்கள் எல்லோரும் அவனது ஸ்வரூபம் என்பதற்கு அடையாளமாகவே உத்தமபுருஷர்களின் தொண்டையில் இப்படி உருண்டை இருக்கிறது. அதே மாதிரி ஸ்திரீகள் யாவரும் தேவீ ஸ்வரூபம் என்பதால் அவளுடைய பரம மங்கள சின்னமான கழுத்து ரேகைகள் மூன்றும் உத்தமப் பெண்களிடமும் இருக்கிறது. இதை ஆசாரியாள் வர்ணிக்கும்போது, "சங்கீதத்தில் ஷட்ஜ கிராமம், மத்யம கிராமம், ஆதார கிராமம் என்று மூன்று வரிசைகள் (scale, gamut) உண்டு. இந்த மூன்று தொகுப்பு (கிராமம்)க்களிலிருந்துதான் மதுரமான நானாவித ராகங்களும் எழுந்திருக்கின்றன. அம்மா, நீயோ சங்கீதத்தின் கதிகளிலும், கமகங்களிலும் மகா நிபுணை. அந்த மூன்று சங்கீத கிராமங்களும் உன் கண்டத்திலிருந்துதான் பிறந்தன. அதற்கு அடையாளமாகவே அது ஒவ்வொன்றுக்கும் உரிய சப்தங்கள் தொண்டைக்குள் எந்தெந்த இடத்தில் பிறந்து எந்தெந்த இடத்தில் முடிகின்றன என்று எல்லை வகுத்துக் காட்டுவது போல், வெளிப்பட இந்த மூன்று ரேகைகளும் உன் கழுத்தில் காணப்படுகின்றன" என்கிறார்.

அத்வைத பரமாசாரியாளுக்குச் சங்கீதத்தில் எத்தனை பாண்டித்தியம் இருந்தது என்பதும் இங்கே தெரியவருகிறது. சங்கீதமே அத்வைதமாக நம்மை மூலத்தோடு கரைப்பதுதான். சாட்சாத் அம்பிகை வீணாதாரிணியான சியாமளாம்பிகையாக விளங்குவதைக் காளிதாஸர் 'நவரத்தின மாலிகை'யில் 'ஸரிகமபதநிரதாம்' என்று பாடுகிறார். அவள் பாடுகிற சங்கீதத்தால் அவளுடைய மிருதுவான இருதயமும், அதற்கும் உள்ளே இருக்கிற அத்வைதமான சாந்தமும் (சாந்தாம், மிருதுள ஸ்வாந்தாம்) வெளிப்படுகின்றன என்கிறார். எத்தனை உணர்ச்சிப் பரவசங்களைத் தூண்டிவிட்டாலும் சாந்தம் தான்சங்கீதத்தின் முடிந்த முடிவாக இருக்க வேண்டும். நவவித கமகங்களைச் செய்கிற சியாமளாம்பிகையான மீனாக்ஷியை வீணை மீட்டிப் பாடிக்கொண்டே இந்த சாந்தத்தோடு சாந்தமாகத்தான் முத்துஸ்வாமி தீக்ஷிதர் கரைந்து போனார். தியாகராஜ ஸ்வாமிகளும், கேட்ட மாத்திரத்தில் எல்லையில்லாத விச்ராந்தி தருகிற மாதிரி சியாம ராகத்தில் 'சாந்தமு லேக ஸௌக்யமு லேது' என்று பாடியிருக்கிறார். ஈசன் எந்தை இணையடி நீழலில் அப்படியே லயித்துப் போகிற இந்த சாந்தத்தைத்தான் அப்பரும் 'மாசில் வீணை' என்பதால் உவமிக்கிறார்.

---

மகாலக்ஷ்மி குறித்த அருள்வாக்குத் தொடர் அடுத்த இதழிலிருந்து வெளியாகும்.

# நட்சத்திரமும் நவநாகரீகமும்

## லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்

உங்களுக்கென ஒரு பாக்ய
நட்சத்திரம்...ஒரு நாகரீகம்
உண்டு...இரண்டையும்
சிறப்புடன் இணைப்பது—
லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்.
பெருமைமிகு பிரிண்டுகள்,
அருமையான வண்ணங்கள்...
பலவிதத் துணிவகைகள்.
தேர்ந்தெடுக்க
7 மடங்கு வகைகள்
வேறு எங்குதான் கிடைக்கும்?



**சிம்மம்:**
ஆளப்பிறந்தவர் நீங்கள்—
நினைத்ததை முடிப்பவர். தாராள
சிந்தையுள்ளவர். சந்திக்கும்
மனிதர்களை உங்கள்பால்
கவர்ந்திழுக்கும் காந்த சக்தி
படைத்தவர். உங்கள் அதிர்ஷ்ட
வண்ணங்கள்—ஆரஞ்சு, பொன்னிறம்,
மஞ்சள். கண்கவரும் அதிநவீன
ஆடைகளில் பவனிவர விரும்புவீர்கள்—
அதே சமயம் பிறர் புகழும் வண்ணமும்
உடுத்துவீர்கள்.

**கடகம்:**
நீங்கள் பழமையை விரும்புபவர்
வீட்டையும் குடும்ப
வாழ்வையும் நேசிப்பவர்.
உங்கள் அதிர்ஷ்ட
வண்ணங்கள்—பச்சை,
சாம்பல் நிறம் (கிரே).
சம்பிரதாய முறைப்படி நீங்கள்
உடையணிய விரும்புவீர்கள்.

**கன்னி**
கூர்ந்த
எதனையும்
ஆழ்ந்து,
ஆராய்ந்தறியும்
மனம் படைத்தவர்
நீங்கள். கற்பனை
மிகுந்தவர். உங்கள்
அதிர்ஷ்ட
வண்ணங்கள்—
கருநீலம், சாம்பல்
வண்ணம் (கிரே),
துரு வண்ணம் (ரஸ்ட்).
துணிச்சலுடன் நவீன
உடைகளை அணிவீர்...
ஆனால் எப்போதும் அல்ல.

லால்பாய்—
அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்




ஏழு மில்களின் ஏற்றமிகு துணிகள்

CML8 36.183 TM

சில்லறை விற்பனையாளர்கள்:
M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.சி. போஸ் ரோடு, சென்னை-1.
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.
M/s. எஸ்வரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு, மதுரை-1.



**சென்னை, இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் 42ம் ஆண்டு விழாவுக்குத் தலைமை தாங்கப் போகிறார் ஸ்ரீ செம்மங்குடி. அவர் கூறும் சில யோசனைகள் :**

நமது சாஸ்திரீய சங்கீதத்தில் ஆர்வம் குறைந்து வருவதாகக் கூறுகிறார்கள். அதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை.

இப்போதும் சாஸ்திரீய சங்கீதத்துக்கு ரசனை அதிகம் உண்டு. முன்பு சில சபாக்கள்தான் இயங்கி வந்தன. இப்போது நூற்றுக்கணக்கான சபாக்கள் ஆங்காங்கு தோன்றிச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. மேலும், ரேடியோ, இசைத்தட்டுக்கள், டேப் ரிகார்டர்கள் போன்ற சாதனங்கள், லட்சக்கணக்கான மக்களிடையே பல தரப்பட்ட சங்கீதத்தைப் பரப்புகின்றன. இதனால் அநேகம் பேர் நல்ல லட்சிய லட்சண ஞானம் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனாலும் சாஸ்திரீய சங்கீதத்தைப் பழைய தலைமுறையைச் சேர்ந்த பெரியோர்களும் நடுத்தர வயது உள்ளவர்களும்தான் கேட்க விரும்புவதாகக் காணப்படுகிறது. இளைஞர்களுக்கு, சினிமா சங்கீதம், மெல்லிசை(!) 'பாப்' சங்கீதம் போன்ற வகைகளில் தான் ஆர்வம் அதிகமாகத் தென்படுகிறது. இந்நிலை மாற அகில இந்திய ரேடியோ ஒத்துழைப்பது அவசியம்.

**பொதுமக்களுக்குச் சௌகரியமான நேரத்தில் சாஸ்திரீயசங்கீதத்தைக் கேட்க ஒலிபரப்பு ஏற்பாடு கிடையாது. அப்படிச் செய்தால்தான் அதில் ருசி ஏற்படும்.** இரவு 9-30 மணிக்கு மேலும், காலை எட்டு மணிக்கும் அதிக சாஸ்திரீய சங்கீதத்தை ஒலிபரப்புகின்றன. இரவு தூங்கப்போகும் நேரத்திலும் காரியாலயத்துக்குக் கிளம்பும் அவசரத்திலும் சௌகரியமாகக் கேட்க முடிவதில்லை.

— செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் !

முன்போல் இரவு ஒன்பது மணிக்கு முன்பாகவே ஒலிபரப்பினால் ருசி ஏற்படுத்தலாம். சங்கீதம் கற்பிக்கும் முறையிலும் மாறுதல் தேவை.

**இப்போது சரளி வரிசையிலிருந்துதான் வாய்ப்பாட்டு சொல்லி வைக்கப்படுகிறது. இந்த முறை மாற்றப்பட வேண்டும். சின்ன உருப்படியாக, சங்கதிகள் நீக்காமல் பாடக் கற்றுக் கொடுத்து, அந்தப் பாட்டுக்களை அவர்கள் பாடப் பழகிய பிறகு, அந்த ராகத்தின் சரளி வரிசைகளைச் சொன்னால், நல்ல ஸ்வர சுத்தம் சாரீரத்தில் ஏற்பட முடியும்.**

கான்வென்டில் படிக்கும் சிறு குழந்தைகளுக்கு முதலில் ஆங்கிலத்தில்

# ரசனை வளரட்டும்; சங்கீதம் சிறக்கட்டும்!



புகைப்படம்: வளர்ந்த ரசனையும் சிறந்த சங்கீதமும். டி. டி. கே. - செம்மங்குடி

பேசத்தானே கற்றுக் கொடுக்கிறார்கள் ? பிறகுதான் 'ஸ்பெல்லிங்' எல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

கடந்த பல நூற்றாண்டுகளில் எத்தனையோ வித்தகர்கள் சங்கீத சாஸ்திரங்களைப் பற்றி நூல்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்களிடையே பல மோதல்கள், குழப்பங்கள் இருந்திருக்கின்றன. அவைகளை யெல்லாம் இணைத்து இந்த நூற்றாண்டுக்கு ஒரு ராக லட்சண நூலை இசை ஆராய்ச்சியாளர்கள் எழுத முன்வர வேண்டும்.

இசைக் கல்லூரிகளில் பயின்று தேர்ச்சி பெற்று வருபவர்களுக்கு அரசாங்கம் உபாத்தியாயர் பதவி கொடுத்துச் சாஸ்திரீய இசை பரவ உதவ வேண்டும்.

இசை உலகின் இளம் தலைமுறையின ரில் எதிர்காலத்தில் நன்கு சோபிப் பார்கள் என்பதற்கான அறிகுறிகளைப் பலரிடம் இன்றே காண்கிறோம். அவர் களுள் நால்வரைத் தேர்ந்தெடுத்துக் கல்கி நேயர்களுக்கு அறிமுகப்படுத்து மாறு சங்கீத ரசிகரும் அறிஞருமான திரு டி. எஸ். பார்த்தசாரதி அவர்களைக் கேட்டுக் கொண்டோம்.

**ஸ்ரீமதி சீதா சுப்ரமணியம்**

சங்கீதக் குடும்பத்தில் பிறந்த இவர் தமது பன்னிரண்டாவது வயதிலிருந்து கர்நாடக இசையில் பயிற்சி பெற்று, பதினேழாவது வயது நிரம்புமுன் அகில இந்திய ரேடியோ வின் சாஸ்திரீய சங்கீதம், மெல்லிசை ஆகிய போட்டிகளில் ஜனாதிபதியின் பரிசுகளைப் பெற் றார். பின்னர் அவர் பங்கெடுத்துக் கொண்ட போட்டிகள் பலவற்றில் முதல் பரிசுகள் இவ ருக்குச் சொந்தமாயின. திருப்பாவை,

திருவெம்பாவை, தேவாரம், திவ்யப் பிரபந் தம், புரந்தரதாசர் முதலிய மகான்களின் கிருதிகள், தமிழ்க் கீர்த்தனைகள் ஆகியவற்றில் நடந்த போட்டிகளில் பரிசு பெற்றதன் காரணமாக இவருக்கு ஏராளமான உருப் படிகள் பாடம் உண்டு.

கடுமையான உழைப்பாளியாகிய ஸ்ரீமதி சீதா இயற்கையாகவே தமக்கு அமைந்துள்ள துல்லியமான சாரீரத்துக்கு இடைவிடாத சாதகத்தின் மூலம் மெருகேற்றி, கனமான சங்கீதத்துக்கும் மெல்லிசைக்கும் ஒருங்கே உதவுமாறு அதைப் பண்படுத்தியிருக்கிறார். வயலின் சந்திரசேகரன், வள்ளியூர் குரு மூர்த்தி முதலிய வித்வான்களிடம் பல அரிய அம்சங்களை கிரகித்து வரும் இப்பாடகி 1971ம் ஆண்டு முதல் மேடையேறி இதுவரை யில்சுமார் ஐம்பது கச்சேரிகள்செய்திருக்கிறார்.

சிறந்த மனோதர்மத்துடன் ராகங்களை விஸ்ராந்தியாக ஆலாபனை செய்து, பொறுக்கி யெடுத்த அழகிய கீர்த்தனங்களைப் பாவப் பொலிவுடன் பாடி, கச்சிதமாகச் சில ஆவர்த் தனங்கள் கற்பனை ஸ்வரம் பாடுவதே இவரது பாணி. ரேவதி, ஸாவேரி, ஆரபி முதலிய ராகங்கள் இவரிடம் தனி அழகுடன் சோபிக் கின்றன. லலித், சிவரஞ்சனி முதலிய ராகங் களில் இவர் பாடும் மீரா பஜன்களும், பிருந்தாவனி, பூர்ண சந்திரிகா ஆகியவற்றில் பாடும் தில்லானாக்களும் ரசிகர்கள் விரும்பிச் சுவைக்கும் அம்சங்கள். தற்சமயம் பத்ராசல ராமதாஸ் ஸ்வாமியின் கிருதிகளில் விசேஷ கவனம் செலுத்தி வரும் ஸ்ரீமதி சீதாவின் எதிர்காலம் இசையுலகுக்குப் பயனளிப்பதாக அமையும்.

**திருச்சி சகோதரிகள்—பிரேமா, ஜயா**

மார்கழி மாதம் அதிகாலையில் ரேடியோவை இயக்கியவுடன் கணீரென்ற குரலில் இரு பெண்கள் பாடியுள்ள மாணிக்க வாசக ஸ்வாமிகளின் திருவெம்பாவையும், திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களும், அதைத் தொடர்ந்து திருபானந்தவாரியார் அவர் களின் விளக்கமும் ஆயிரக்கணக்கான ரசி கர்கள் கேட்டு மகிழும் நிகழ்ச்சிகளாகும். சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் அவர்களால் மெட்டு அமைக்கப்பெற்ற இப் பாடல்களைப் பதிவு செய்துள்ளவர்கள் 'திருச்சி சகோதரிகள்' என்று அழைக்கப்படும் பிரேமாவும், ஜயாவும் ஆவர்.

சிறு வயதில் தமது தாயாரிடமும், பின்னர் தஞ்சாவூர் சங்கரன் அவர்களிடமும் சங்கீதம் கற்ற இவ்விருவரும் சென்னை மத்திய அர சாங்க இசைக் கல்லூரியில் முறையாகப் பயின்று முதல் வகுப்பில் 'சங்கீத வித்வான்' பட்டம் பெற்றவர்கள். பிறகு மத்திய அர சாங்கத்தின் ஸ்காலர்ஷிப் பெற்று,

# எதிர்காலச் செல்வங்கள்


வயலின் மூவர்


சீதா சுப்ரமணியம்

ஸ்ரீ செம்மங்குடி அவர்களிடமே விசேஷப் பயிற்சி பெற்றுக் கச்சேரி செய்யும் திறமை பெற்றனர். முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கமலாம்பா நவாவரண கீர்த்தனைகள், நவக்கிரக கீர்த்தனைகள் முதலியவற்றை இவர்கள், 'செம்மங்குடி பாணி'யில் பாடும் முறை கவர்ச்சிகரமானது. சன்னமான, இனிய குரல் படைத்த இவ்விரு சகோதரிகள் அகில இந்திய ரேடியோவின் இசைச் சித்திரங்களில் பங்கு பெற அடிக்கடி தேர்ந்தெடுக்கப்படுவதில் வியப்பொன்றுமில்லை. தற்சமயம் பல ஊர்களில் கச்சேரி செய்து சாஸ்திரீய சங்கீதத்துக்கும் தங்களுடைய பயிற்சிக்கும் புகழ் தேடி வருகின்றனர்.

### வயலின் மூவர்

சென்ற ஆண்டு டிஸம்பர் சங்கீத சீஸனில் சென்னையில் மாத்திரம் பதினைந்து கச்சேரிகள் நிகழ்த்திய எல். வைத்தியநாதன் (30), எல். சுப்பிரமணியம் (26), எல். சங்கர் (24) ஆகிய 'வயலின் மூவர்' வாத்திய சங்கீதத் துறையிலேயே ஒரு புரட்சியைத் தோற்றுவித்தனர் என்று கூறுவது மிகையாகாது. தங்கள் தந்தையாராகிய லக்ஷ்மிநாராயண ஐயரிடமே பயிற்சி பெற்ற இம்மூவரும், வயலின் வாத்தியத்தில் அகர சாதகம் செய்தவர்கள். மூவரும் சேர்ந்து பைரவி, மோகனம் ஆகிய ராகங்களில் உள்ள 'விரிபோணி', 'நிந்து கோரி' முதலிய வர்ணங்களை நான்கு காலங்களில் வாசிப்பது பிரமிப்பை உண்டாக்கும் ஒரு சாதனையாகும். ஐரோப்பிய சங்கீதமும் பயின்று டிப்ளோமா பெற்றவர்களாதலால் வில் போடுதல் முதலியவற்றில் மேற்கத்திய இசையின் அரிய முறைகளைப் பின்பற்றி நமது சங்கீதத்துக்கு விசேஷமான பொலிவையும் மெருகையும் ஏற்றியுள்ளனர். இவர்கள் ஒன்றாகச் சேர்ந்து வர்ணங்கள், கிருதிகள் முதலியவற்றை வாசிக்கும்பொழுது ஒருவரே வாசிப்பது போன்ற உணர்ச்சி சபையோரிடம் ஏற்படுகிறது. அரிய லய வின்யாசம், கற்பனா ஸ்வரப்பெருக்கு, பிசிர் அற்ற இனிய நாதம் இவையே இவர்களுடைய வாசிப்பின் தனிச் சிறப்புக்கள்.

ஸ்ரீ சுப்பிரமணியம் வைத்தியக் கல்லூரியில் படித்து எம். பி. பி. எஸ். பட்டம் பெற்றவர். ஸ்ரீ சங்கர் அமெரிக்க சர்வகலாசாலை ஒன்றிலிருந்து சங்கீதத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். இவ்விருவரும் தற்பொழுது அமெரிக்காவில் கர்நாடக இசையைப் பரப்பும் தொண்டில் ஈடுபட்டுள்ளனர். சர்வகலாசாலையில் இசை போதிப்பதுடன், ஸ்ரீ சங்கர் தனிக் கச்சேரிகள் செய்தும், ஸ்ரீ சுப்பிரமணியம் பண்டித ரவி சங்கரின் வாத்திய கோஷ்டியில் வயலின் வாசித்தும் பணியாற்றி வருகின்றனர். வருகிற டிஸம்பர் சங்கீத விழாக்களின் பொழுது 'வயலின் மூவருக்கு' சென்னையிலும், பிற ஊர்களிலும் இருபதுக்கு மேற்பட்ட கச்சேரிகள் ஏற்பாடாகியிருக்கின்றன.

### மதுரை சேஷகோபாலன்

சென்ற சில வருடங்களாகச் சென்னை ரசிகர்கள் மிகவும் விரும்பிக் கேட்டு வரும் மற்றோர் இளம் பாடகர் மதுரை டி. என். சேஷகோபாலன் ஆவர். ஸத்குரு சங்கீத வித்யாலயத்தின் பிரின்ஸிபாலாக இருந்த வித்வான் சங்கரசிவம் அவர்களிடம் கருத்துடன் இசை பயின்ற இவ்விளைஞர் சம்பிரதாயத்திலிருந்து சிறிதும் வழுவாது பாடுகிறார். கௌரவமான வழியில், மனோதர்மத்துடன் ராகங்களை விஸ்தாரமாக ஆலாபனை செய்கிறார். சுருதி சுத்தமான இனிய சாரீரத்துடன் மூன்று மணி நேரத்துக்கு மேல் சபையோரைச் சிறிதும் களைப்படையச் செய்யாமல் கச்சேரி செய்கிறார். இவ்விளம் வயதிலேயே சிக்கலான பல்லவிகளை அமைத்துப் பாடும் திறமை பெற்ற இவரது லயக் கட்டுப்பாட்டைப் பிரபல மிருதங்க வித்வான்களும் வியந்துள்ளனர். மேற்கூறிய வித்யாலயத்திலேயே ஆசிரியராகப் பணியாற்றி வரும் இவரிடமிருந்து வருங்காலத்தில் ரசிக உலகம் இன்னும் சீரிய இசைத் தொண்டை எதிர்பார்க்கிறது.

— டி.எஸ். பார்த்தசாரதி —



சேஷகோபாலன்



பிரேமா—ஜெயா

# இயற்கை உங்களுக்கு அளித்துள்ளது எழில்மிகு கேசம்...
## அதனை அவ்வண்ணமே வைத்திருப்பீர்
## ஹேலோ கேச பராமரிப்புமூலம்

HSR.G.I.TH

**ஹேலோ ஷாம்பூக்கள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன–உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே**

**ஹேலோ காஸ்மேடிக் ஷாம்பூ:**
இந்த விசேஷ ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ எக் ஷாம்பூ:**
விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உயர் வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனுடன் உங்கள் கேசம் கட்டுக்–கோப்புடன், கவர்ச்சியாகத் திகழ்கிறது.




**ஹேலோ லெமன்–ஃப்ரெஷ் ஷாம்பூ:**
உங்கள் கேசத்திற்கு இயற்கையான தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:**
ஏராளமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு–இன்றே உபயோகிக்கத் தொடங்குவீர் ஹேலோ**



# பழைய தமிழும் புதிய எழிலும்!



தெலுங்கும் சமஸ்கிருதமுமே மேடைக் கச்சேரிகளில் முக்கியமாக விளங்கிய காலத்தில் எத்தனையோ இதயங்கள் தமிழ் சாகித்தியங்களுக்கும் அந்தப் பெருமை கிட்டாதா என்று ஏங்கியதுண்டு. ஆனால் அந்த ஏக்கத்துக்கு இன்று இடமில்லாமல் பலப் புலவர் அரிய தமிழ் சாகித்தியங்களை இயற்றியிருக்கிறார்கள். வித்வான்களும் பாடி மகிழ்விக்கிறார்கள்.

ஆழ்வார்கள், நாயன்மார்களைத் தொடர்ந்து தாயுமானவர், முத்துத் தாண்டவர், அருணாசலக் கவி, கோபால கிருஷ்ண பாரதி, கவி குஞ்சர பாரதி என்று எத்தனையோ பக்த கவிகள் தமிழ்ப் பாடல்கள் இயற்றிப் பெருமை சேர்த்தார்கள். அவ்வழியிலே வந்த கோடீசுவர ஐயர் ஓர் அற்புதமான சாதனை புரிந்திருக்கிறார். எழுபத்திரண்டு மேளகர்த்தா ராகங்களுக்கும் இலக்கண இலக்கியமாகத் திகழும்படி 'கந்த கானாமுதம்' என்ற நூலை இயற்றியிருக்கிறார்.

1867ம் ஆண்டில் பெருங் கரை என்னும் ஊரில் பிறந்த இவரது பூர்விகம் நந்தனூர். இவர் வாசஸ்தலமாகக் கொண்ட ஊர் புதுவயல். சென்னை உயர் நீதி மன்றத்தில் மொழி பெயர்ப்பாளராகப் பணியாற்றிய இவர், மிருதங்க இசைப் பற்றுக் கொண்டவர். கவி குஞ்சர பாரதியின் பெண் வயிற்றுப் பேரராகையால், இயல்பாகவே இசை ஞானம் இருந்தது. பூச்சி ஸ்ரீனிவாசய்யங்கார், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் போன்றோரிடம் சிட்சை பெற்று அதை மெருகிட்டுக் கொண்ட கோடீசுவர அய்யர் ரசிகமணி டி.கே.சி., கல்கி போன்றவர்களின் நெருங்கிய நண்பர்.

இவ்வளவிருந்தும் இவருக்கு ஓர் ஐயப்பாடு, 'தம்மால் தமிழில் இலட்சண – இலட்சிய கீர்த்தனைகள் பாட முடியுமா ?' என்று ! அதைக் கனவில் தோன்றித் தியாகப் பிரும்மம் களைந்திருக்கிறார், 'முன்னேறு, வெற்றியடைவாய்!' என்று ஆசி கூறி. 'இனி நமக்கொரு கவலையும் இல்லை' என்ற பிலஹரி ராகக் கீர்த்தனை அந்தக் கனவை ஒட்டி உருவானதே.

இன்னொரு முறை இவருக்கு நெருங்கிய உறவினர் வேணுகோபாலய்யர் தீராத நோயினால் துன்புற்றுக் கொண்டிருந்தார். 'உன் பேரில் பக்தியும் சங்கீதத்தில் ஈடுபாடும் எனக்கு நிலையாக இருக்க வேண்டுமானால், ஸ்ரீ வேணுகோபால தேவா! வா, வா... நின்னருள் தருகவே !' என்று உருகிப் பாடியிருக்கிறார். பக்தி இசை, நோயைத் தீர்த்து வைத்திருக்கிறது.

முருகன்பால் அபார பக்தி கொண்ட இவர் கீர்த்தனைகள் கவிகுஞ்சரதாசன் என்ற முத்திரையுடன், அந்தந்த ராகங்களின் பெயர்களையும், இலட்சணங்களையும் விளக்கும் இலட்சிய நூலாக வெளிவந்துள்ளன. அவரது பாடல்களைப் பாடிப் பரவி வரும் ஸ்ரீ நாகமணியும் அப்பாவுக்குச் சரியான பிள்ளைதான். இவரும் பல கீர்த்தனைகள் கவனம் செய்துள்ளார். இவரும், இவரது மனைவி குஞ்சரியும் அவரது பாடல்களைப் பாடுவதன் மூலம், கோடீசுவர ஐயரை 'கோடியில் ஒருவர்' என்று நிரூபித்து வருகின்றனர்.

சென்ற தலைமுறையைச் சேர்ந்த கோடீசுவர அய்யரைப் பற்றிப் படித்த கையோடு இன்றையத் தலைமுறைக்கு எடுத்துக்காட்டாக – ஒருவரை ஸ்ரீ ஆர். வேணுகோபால் அவர்களைச் சந்தியுங்கள்.

'' எனக்கு இசைப் பற்று பூர்விக சொத்தோ பரம்பரைச் சொத்தோ அல்ல. 'சகவாச தோஷம்' என்பார்களே, அப்படிச் சில சங்கீத ரசிகர்களுடனும், விமரிசகர்களுடனும் தொடர்பு உண்டு ; பேசி மகிழ்வேன். பாட்டும் கவனம் செய்யும் காலம் வரும் என்று நான் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. ஆனால் இதயத்துள் ஓர் ஏக்கம் இருந்து வந்தது.

ஒரு நாள் என் உள்ளுக்குள்ளிருந்து ஒரு சக்தி உசுப்பிவிட்டது. என்னையும் மீறி வசந்தா ராகத்தில் முதல் கீர்த்தனையை என் உள்ளம் எழுதியது. அதற்கு ஸ்வரம் போட்டுப் பாடிப் பார்த்தேன் ! எனது முதல் கீர்த்தனை தெலுங்கில்தான் தோன்றியது.

அப்புறம் ஒரு சமயம் திட்டைக்குப் போயிருந்தேன். ஸ்ரீ சுகந்த குந்தளாம்பிகையைத் தரிசனம் செய்தேன். தன்யாசியில் உருவான 'ஸ்ரீ சுகந்தகுந்தளாம்பிகா' கீர்த்தனம் அன்று தோன்றியதுதான்! தோடி ராகத்தில் 'தாமதமா' கீர்த்தனம்கூட அன்றே உருவானதுதான் '' என்கிறார் ஸ்ரீ ஆர். வேணுகோபால். இவர் இதுவரை நாற்பது கீர்த்தனைகள் எழுதியிருப்பார். ஸ்ரீ வேணுகோபாலின் மொழியில் சொன்னால் இசைத் தேவி அவரை ஒரு கருவியாக்கிக் கொண்டாள் என்று கூறுவதுதான் பொருத்தம்.

அவர் மூலம் இசைத் தேவிக்குக் கிடைத்த கீர்த்தனைகள் பல பிரபல வித்வான்கள் மூலம் பரிமளிக்கிறது என்றால் தெய்வ சாந்நித்தியத்துக்கு அவை இட்டுச் செல்கின்றன என்பது தானே பொருள் ?

— ரா. வீ.

# ஜலதோஷம் ஒழிக




காப்பது கைகண்ட ஆறு மருந்துகளின் கலவையான

# ரபெக்ஸ்




வலுவாகத் தேய்ப்பதற்கான ஜலதோஷ நிவாரணி—ஜலதோஷத்தை அதி விரைவில் தணித்திட-அடைபட்ட மூக்கைத் திறக்க, மார்பிலுள்ள நெரிசலைக் கரைக்க, உடம்பிலே கதகதப்பூட்ட — தனிப்பட உருப்பெற்றது.

20 கிராம், 65 கிராம் புட்டிகளிலும், 6 கிராம் டப்பிகளிலும், வருபவை.

**இலவசம்** பால் பேனா... 20 கிராம் புட்டி வாங்கும்போது.

everest/921/ACW-tm



# அரியதொரு சங்கம்; பெரியதொரு தலைவர்!

திருநெல்வேலி மாவட்டம், இடிந்தகரை என்ற கிராமத்தில் மீனவர் மிகுதி. ஏதோ உட்பூசலினால் இந்த மீனவர்கள் பெருந் துயரத்துக்கு உள்ளானார்கள். வாழ்வா, சாவா என்ற நிலையில் இவர்கள் இருப்பதை விசுவ ஹிந்து பரிஷத் ஊழியர்கள் அறிந்தனர். உடனே அங்கு விரைந்து அவர்களின் புனர் வாழ்வுக்கு வழி செய்தனர். உடனடியாகத் தேவைப்பட்ட உடை, உணவு கொடுத்ததுடன் அவர்கள் மீண்டும் சுய கௌரவத்துடன் வாழ வகை செய்யும் விதத்தில் மீன் பிடிக்கும் வலைகள் முதலியன வாங்கித் தந்தனர். அவர்கள் வருமானத்தை அதிகரித்துக் கொள்ள வசதியாக ஒரு சிறிய பீடித் தொழிலகமும் அமைத்துத் தந்தனர். குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் எழுந்தது. ஹிந்து மதத்தைக் கிராமவாசிகள் திரும்பவும் பின்பற்ற விரும்புவதை அறிந்து அதற்கும் வசதி செய்து ஒரு பிள்ளையார் கோயில் நிர்மாணித்தனர்.

இத்தகைய நற்பணியாற்றும் விசுவஹிந்து பரிஷத்தை ஸ்தாபித்தவர்கள் ஆன்மிகத் துறையிலும் அறிவாற்றலிலும் சிறந்த மிகப் பிரபலமான மனிதர்கள். அவர்களில் பலர் இன்று ஜீவியந்தர்களாக இல்லாது போனாலும் விசுவ ஹிந்து பரிஷத் தொடர்ந்து ஆக்கப் பணி புரிந்து வருகிறது. கடந்த பத்தாண்டுகளில் அதன் பணி இந்தியாவின் எல்லாத் திசைகளுக்கும் பரவியுள்ளது. ஆயிரக் கணக்கான தொண்டர்கள் தேசத்தின் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் சென்று ஹிந்து மதத்தின் பல்வேறு ஜாதியினரின் ஒத்துழைப்பை மட்டுமின்றி, வேற்று மதத்தவரின் ஒத்துழைப்பையும் கோரிப் பெற்றுள்ளனர். பல மருத்துவ மனைகள், பள்ளிக்கூடங்கள், ஹரிஜனங்களுக்கு ஹாஸ்டல் போன்றவற்றைத் திறம்பட நடத்துகின்றனர். இத்தகைய அன்புப் பணிகளும் சொற்பொழிவுகளும், பஜனைகளும், கலை நிகழ்ச்சிகளும் ஹிந்து மதத்தின் பல்வேறு வகுப்பினரிடையே ஒற்றுமையையும் ஒன்றிய நோக்கையும் வளர்த்து வருகின்றன. தமிழகத்தில் மட்டும் நான்கு மருத்துவ மனைகள் இயங்குகின்றன. இது தவிர முன்னர் குறிப்பிட்ட இடிந்தகரையில் போல் இடிந்துபோன சமூக வாழ்வைப் பலப் பல கிராமங்களில் புதுப்பித்துள்ளனர்.

ஹிந்து சமூகத்தின் ஒற்றுமைக்கு உதவி அதனைப் பலப்படுத்துதல், ஹிந்து மதத்தின் கோட்பாடுகளின்படி புற வாழ்வும் ஆன்மிக அக வாழ்வும் நடத்த மக்களுக்கு உதவுதல், அயல் நாடுகளில் உள்ள ஹிந்துக்களுடன் தொடர்பு கொண்டு தேவையான சகாயங்கள் புரிதல் ஆகிய மூன்று நோக்கங்களைக்கொண்டு ஆரம்பிக்கப்பட்ட விசுவ ஹிந்து பரிஷத், துயர் துடைப்பதும் கை கொடுத்துத் தூக்கி விடுவதுமே இந்நோக்கங்கள் நிறைவேறச் சிறந்த வழி என்று புரிந்து கொண்டு அரும் பணியாற்றி வருகிறது.

விசுவ ஹிந்து பரிஷத்தின் இன்றைய அகில இந்தியத் தலைவர் மகாராணா பகவத் சிங் டிசம்பர் 14ந் தேதி சென்னை வருகிறார். முந்நாளில் உதயப்பூர் மகாராஜாவாக விளங்கிய ஸ்ரீ பகவத் சிங், இந்தியா சுதந்திரமடையும்வரை இலையில்தான் சாப்பிடுவோம், வைக்கோல் பரப்பில்தான் படுப்போம், டில்லி செங்கோட்டைக்குள் நுழைய மாட்டோம் என்றெல்லாம் சபதம் எடுத்துக்கொண்ட ஓர் உன்னத ராஜ பரம்பரையில் தோன்றியவர். 1956ல் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு திரு பகவத் சிங்கின் கரம் பற்றிச் செங்கோட்டைக்குள் அழைத்துப் போனார்.

திரு பகவத் சிங் சகல கலா வல்லவர் என்று சுருக்கமாகச் சொல்லிவிடலாம். ஐ. ஏ.எஸ். படித்துத் தேறியது முதல், கிரிக்கெட், போலோ—விளையாட்டுக்கள் வரை அவர் அடைந்துள்ள பட்டங்கள், தேர்ச்சிகள் எத்தனை எத்தனையோ. உலகம் முழுவதிலுமுள்ள பல்வேறு சமூக நல ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டவர்.. கலைகளின் வளர்ச்சிக்கும் சமூகப் பணிகளுக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருபவர்.

விசுவ ஹிந்து பரிஷத்தின் தலைவருக்குச் சென்னையில் தக்க முறையில் வரவேற்பளிக்க முக்கியஸ்தர்கள் அடங்கிய ஒரு குழு உருவாகியுள்ளது. அவர்களோடு சேர்ந்து நாமும் நல்வரவு கூறுவோம். அறிவாற்றலையும் அன்புள்ளத்தையும் இரு சாம்ராஜ்யங்களாகப் பெற்றுள்ள பகவத் சிங் அவர்களை 'வருக வருக' என வரவேற்று வாழ்த்துவோம்.

### திருத்தம்

இவ்வருட 'கல்கி' தீபாவளி மலரில் வெளியாகியுள்ள ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அருள்வாக்கில், சுந்தர ஸ்வாமிகள் **திருவாரூரில்** ஏழு கோயில்களுக்கு ஒரே நாளில் கும்பாபிஷேகம் செய்ததாகப் பிரசுரமாகி யிருக்கிறது. இது தவறு. திருவையாற்றையும் அதைச் சுற்றிய ஆறு ஸ்தலங்களையும் சேர்த்து 'ஸப்த ஸ்தானம்' எனப்படும் ஏழு கோயில்களுக்கு சுந்தரஸ்வாமிகள் ஒரே தினத்தில் குடமுழுக்கு நிகழ்த்தியதாகவே ஸ்ரீ ஆசாரியப் பெருமான் அருளியிருக்கிறார்கள். பிரசுரத்தில் ஏற்பட்ட தவற்றுக்கு வருந்துகிறோம்.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி

Sobhagya GR 74-2-Tam.



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்-கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லா-வற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில்-மற்றும் இதர கெட்டி மரங்களி லிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகிய வற்றுக்கான நுட்பமிகுமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ள-தோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்— தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

முப்பத்துமூன்றாம் அத்தியாயம்

## இருள் சூழ்ந்தது

**மா**மல்லர் அன்று ஆயனரின் அரண்ய வீட்டிலிருந்து புறப்பட்டுக் காஞ்சி நகரை நோக்கிச் சென்ற போது உச்சி நேரம். நிர்மலமான நீல ஆகாசத்தில் புரட்டாசி மாதத்துச் சூரியன் தலைக்கு மேலே தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஆயினும் மாமல்ல நரசிம்மருக்கு அப்போது வானமும் பூமியும் இருள் சூழ்ந்திருந்ததாகத் தோன்றியது. அமாவாசை நள்ளிரவில் நாற்புறமும் வானத்தில் கன்னங்கரிய மேகங்கள் திரண்டிருந்தாற் போன்ற அந்தகாரம் அவர் உள்ளத்தைக் கவிந்து கொண்டிருந்தது. ஒரு சின்னஞ்சிறு நட்சத்திரத்தின் 'மினுக் மினுக்' என்னும் ஒளிக் கிரணத்தைக்கூட அந்தக் காரிருளில் அவர் காணவில்லை.

ஆனால் திடீர் திடீர் என்று சில சமயம் பேரிடி முழக்கத்துடன் கூடிய மின்னல்கள்—கீழ்வான முகட்டிலிருந்து மேல் வான முகட்டு



வரையில் அந்தகாரத்தைக் கிழித்துக் கொண்டு பாய்ந்த மின்னல்கள்; கண்ணைப் பறித்து மண்டையைப் பிளக்கும் பயங்கர தீட்சண்யஒளி மின்னல்கள் — மாமல்லருடைய உள்ளமாகிற வானத்தில் தோன்றத்தான் செய்தன. அந்த மின்னல் ஒளியெல்லாம் ஆயிரமாயிரம் கூரிய வாள்களும் வேல்களும் போர்க்களத்தில் ஒன்றோடொன்று உராயும் போது சுடர்விட்டு ஒளிர்ந்து மறையும் மின்னல்களாகவே அவருடைய அகக் காட்சியில் தோற்றம் அளித்தன.

சிவகாமி அடியோடு நஷ்டமாகி விட்டதாகவே மாமல்லர் எண்ணினார். சளுக்கரால் சிறைப்பட்டுச் சிவகாமி உயிர் வாழ்ந்திருப்பாள் என்று அவரால் கற்பனை செய்யவே முடியவில்லை.

சிறைப்பட்டுச் சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் பிராணனை விட்டுத்தான் இருக்க வேண்டும். கேவலம் மற்றச் சாமான்யப் பெண்களைப் போல் அவள் சத்துருக்கள்வசம் சிக்கிக் கொண்டபிறகு உயிரை வைத்துக் கொண்டிருப்பாளா? மானத்தைக் காட்டிலும் பிராணனே பெரிது என்று எண்ணும் ஈனத்தனம் சிவகாமியிடம் இருக்க முடியுமா?

தன்னுடைய வாழ்க்கையிலிருந்தும் இந்தப் பூவுலகத்தி லிருந்தும் அந்தத் தெய்விக ஒளிச்சுடர் முடிவாக மறைந்தே போய் விட்டது. அத்தகைய தெய்விக சௌந்தரியத்துக்கும் கலைத் திறனுக்கும் மேன்மைக் குணத்துக்கும் இந்த உலகம் தகுதியற்றது. தானும் தகுதியற்றவன்!

இரண்டு தந்தைகளுமாகச் சேர்ந்து சிவகாமியின் உயிருக்கு இறுதி தேடி விட்டார்கள். தன்னுடைய வாழ்வுக்கும் உலை வைத்து விட்டார்கள். ஆனபோதிலும் அவர்கள் மீது மாமல்லர் அதிகமாகக் கோபம் கொள்ள முடியவில்லை.

மகளைப் பிரிந்த துயரத்தினால் ஆயனர் ஏறக்குறைய சித்தப் பிரமை கொண்ட நிலையில் இருக்கிறார். கால் முறிந்து, எழுந்து நிற்கவும் முடியாமல் கிடந்த இடத்திலேயே கிடக்கிறார். அவர்மேல் எப்படிக் கோபம் கொள்வது? அல்லது, போர்க் களத்திலே படுகாயம் அடைந்து யமனுடன் போராடிக் கொண்டிருக்கும் மகேந்திர பல்லவரிடம்தான் எவ்விதம் கோபம் கொள்ள முடியும்?

சிவகாமி இல்லாத உலகத்தில் தாம் உயிர் வாழ்வது என்னும் எண்ணத்தை மாமல்லரால் சகிக்கவே முடியவில்லை. எனினும் சில காலம் எப்படியும்பல்லைக் கடித்துக் கொண்டு ஜீவித்திருக்கத்தான் வேண்டும். நராதமர்களும், நம்பிக்கைத் துரோகிகளும், மனித உருக் கொண்ட



ராடசதர்களுமான வாதாபிச் சளுக்கர்களைப் பழி வாங்குவதற்காகத்தான்!

இதுவரையில் இந்த உலகமானது கண்டும் கேட்டுமிராத முறையிலே பழி வாங்க வேண்டும்! சளுக்கர் தொண்டை நாட்டில் செய்திருக்கும் அக்கிரமங்களுக்கு ஒன்றுக்குப் பத்து மடங்காக அவர்களுக்குச் செய்ய வேண்டும். சளுக்கர் நாட்டில் இரத்தஆறுகள் ஓட வேண்டும். அப்படிப் பெருகி ஓடும் செங்குருதி நதிகளில், பற்றி எரியும் பட்டணங்களின் மீது கிளம்பும் அக்கினி ஜ்வாலைகள் பிரதிபலிக்க வேண்டும்! அந்த அரக்கர்களின் நாட்டிலே அப்போது எழும் புலம்பல் ஒலியானது தலைமுறை தலைமுறையாகக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்!

இவ்விதம் பழி வாங்குவதைப் பற்றி எண்ணியபோதெல்லாம் மாமல்லருக்குச் சிறிது உற்சாகம் உண்டாயிற்று. அடுத்த கணத்தில் 'சிவகாமி இவ்வுலகில் இப்போது இல்லை. அவளை இனிமேல் பார்க்கவே முடியாது' என்ற எண்ணம் தோன்றியதும் உற்சாகம் பறந்துபோய்ச் சோர்வு குடிகொண்டது. உடம்பின் நரம்புகள் தளர்ந்து சகல நாடிகளும் ஒடுங்கிக் குதிரையின் கடிவாளங்கள் கையிலிருந்து நழுவும்படியான நிலைமையை அடைந்தார்.

அந்த மனச் சோர்வைப் போக்கிக் கொள்வதற்காக மாமல்லர் பழைய ஞாபகங்களில் தம்முடைய மனத்தைச் செலுத்த முயன்றார்.

சென்ற மூன்று நான்கு வருடங்களில் சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த தொடர்பை நினைத்தபோது மாமல்லரின் இதய அடிவாரத்திலிருந்து பந்து போன்ற ஒரு பொருள் கிளம்பி மேலே சென்று தொண்டையை அடைத்துக்



கொண்டது போல் இருந்தது. கண்களின் வழியாகக் கண்ணீர் வருவதற்குரிய மார்க்கங்களையும் அது அடைத்துக் கொண்டு திக்குமுக்காடச் செய்தது.

ஆஹா! உலகத்தில் அன்பு என்றும், காதல் என்றும், பிரேமை என்றும் சொல்கிறார்களே! சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த மனத் தொடர்பைக் குறிப்பிடுவதற்கு இவையெல்லாம் எவ்வளவு தகுதியற்ற வார்த்தைகள்!

தளபதி பரஞ்சோதியும் அந்தத் திருவெண்காட்டு மங்கையும் கொண்டுள்ள தொடர்பைக்கூட அன்பு, காதல், பிரேமை என்றுதான் உலகம் சொல்கிறது. ஆனால், பரஞ்சோதியின் அனுபவத்துக்கும் தம்முடைய அனுபவத்துக்கும் எத்தனை வித்தியாசம்!

பரஞ்சோதி சேர்ந்தாற்போல் பல தினங்கள் உமையாளைப் பற்றி நினைப்பதுகூட இல்லை என்பதை மாமல்லர் அறிந்திருந்தார். ஆனால் அவருடைய உள்ளத்திலேயிருந்து ஒருகண நேரமாவது சிவகாமி அப்பாற்பட்டதுண்டா? கேணியில் உள்ள தண்ணீரை இறைத்து விட்டால் அடியில் உள்ள நீர் ஊற்றிலிருந்து குபுகுபு வென்று தண்ணீர் மேலே வருமல்லவா? அதேமாதிரியாக மாமல்லரின் இருதயமாகிய ஊற்றிலிருந்து சிவகாமியின் உருவம் இடைவிடாமல் மேலே வந்து கொண்டிருந்தது. ஆயிரமாயிரம் சிவகாமிகள் நெஞ்சின் ஆழத்திலிருந்து கிளம்பி மேலே மேலே வந்து மறைந்து போய்க் கொண்டே யிருப்பார்கள்.

முகத்தில் புன்னகை பூத்த சிவகாமி, கலீரென்று சிரிக்கும் சிவகாமி, புருவம் நெரிந்த சிவகாமி, சோகம் கொண்ட சிவகாமி, பயத்துடன் வெருண்டு பார்க்கும் சிவகாமி, கண்களைப் பாதி மூடி, ஆனந்த பரவசத்திலிருக்கும் சிவகாமி, வம்புச்சண்டைக்கு இழுக்கும் விளையாட்டுக் கோபம் கொண்ட சிவகாமி— இப்படியாக எத்தனை எத்தனையோ சிவகாமிகள் மாமல்லரின் உள்ளத்தில் உதயமாகிக் கொண்டே யிருப்பார்கள்.

தாய் தந்தையரோடு பேசிக்கொண்டிருக்கும்போதும், இராஜரீக விவகாரங்



களை மிக்கக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருக்கும்போதும், புரவியின் மீது அதிவேகமாகப் போய்க் கொண்டிருக்கும் போதும் இராஜ சபையில் வீற்றிருந்து ஆடல் பாடல் விநோதங்களைக் கண்டு கேட்டுக் களித்துக் கொண்டிருக்கும் போதும், போர்க்களத்தில் வாள்களும் வேல்களும் நாற்புறமும் ஒளி வீசி ஒலி செய்ய எதிரி சைனியங்களுடன் வீரப் போர் புரிந்து அவர்களை விரட்டியடிக்கும் போதும் எப்படியோ மாமல்லரின் உள்ளத்தின் அடிவாரத்தில் சிவகாமியின் நினைவு மட்டும் இருந்து கொண்டு தான் இருக்கும்.

பகல் வேளையில் பல்வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கும் சமயங்களிலே தான் இப்படியென்றால், இரவு நேரங்களில் சொல்ல வேண்டியதில்லை. காஞ்சி நகரில் அரண்மனையில் தங்கும் நாட்களில் இரவு போஜனம் முடிந்து தாம் தன்னந் தனியாகப் படுக்கைக்குப் போகும் நேரத்தை எப்போதும் மாமல்லர் ஆவலுடன் எதிர்நோக்குவது வழக்கம். ஏனெனில், சிவகாமியைப் பற்றிய நினைவுகளிலேயே அவருடைய உள்ளத்தைப் பூரணமாக ஈடுபடுத்தலாம் அல்லவா? கருவண்டையொத்த அவளுடைய கண்களையும், அந்தக் கண்களின் கருவிழிகளைச் சுழற்றி அவள் பொய்க் கோபத்துடன் தன்னைப் பார்க்கும் தோற்றத்தையும் நினைத்து நினைத்துப் போதை கொள்ளலாம் அல்லவா?

இப்படி நெடுநேரம் சிவகாமியைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்த பிறகு கடைசியில் கண்களை மூடித் தூங்கினால், தூக்கத்திலும் அவளைப் பற்றிய கனவுதான். எத்தனை விதமான கனவுகள்! அந்தக் கனவுகளில் எத்தனை ஆனந்தங்கள்! எத்தனை துக்கங்கள்! எத்தனை அபாயங்கள்? எத்தனை ஏமாற்றங்கள்!

கனவுகளிலே என்னவெல்லாமோ ஆபத்துக்கள் சிவகாமிக்கு ஏற்பட்டதும், அவற்றிலிருந்து அவளைத் தப்புவிக்கத் தாம் முயன்றதும், சில சமயம் அவளைத் தப்புவிப்பதற்கு முன்னாலே கனவு கலைந்து எழுந்து மீதி இரவெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததும், மறுநாள் விரைந்து சென்று சிவகாமிக்கு அபாயம் ஒன்றுமில்லை என்று தெரிந்து கொண்டு ஆறுதல் அடைந்ததும், மாமல்லருக்கு இப்போது நினைவுக்கு வந்தன. அந்தப் பயங்கரமான கனவுகள் இப்போது மெய்யாகிவிட்டன! உண்மையாகவே ஆபத்து வந்த சமயத்தில் தான் அருகிலிருந்து அவளைக் காப்பாற்ற முடியாமற் போய்விட்டது.

அந்தப் பேதையின் உள்ளத்தில் இப்படி ஒரு பெரிய ஆபத்துத் தனக்கு வரப் போகிறது என்பது எப்படியோ தோன்றியிருக்க வேண்டும். இதன் காரணமாகத்தான் அவள் தன்னிடம் அடிக்கடி, "என்னை மறக்கமாட்டீர்கள் அல்லவா?" என்றும், "என்னைக் கைவிட மாட்டீர்கள் அல்லவா?" என்றும் கேட்டுக் கொண்டிருந்தாள். அப்போதெல்லாம், "இது என்ன அர்த்தமில்லாத கேள்வி?" என்று மாமல்லர் அலட்சியமாகத் திருப்பிக் கேட்பது வழக்கம். உண்மையில் அது எவ்வளவு அர்த்த புஷ்டியுள்ள கேள்வி!

சிவகாமி! என் கண்ணே! உன்னை மறக்கமாட்டேன்! இந்த ஜன்மத்தில் உன்னை மறக்கமாட்டேன்! எந்த ஜன்மத்திலும் மறக்கமாட்டேன். உன்னை என்னிடமிருந்து பிரித்த பாதகர்கள் மேல் முதலில் பழி வாங்குவேன்! அதற்குப் பிறகு உன்னைத் தேடிக் கொண்டு வருவேன். யமன் உலகத்துக்கு உன்னைத் தொடர்ந்து வந்து தர்மராஜாவிடம், "எங்கே என் சிவகாமி?" என்று கேட்பேன். சொர்க்க லோகத்துக்குச் சென்று தேவேந்திரனிடம், "என் சிவகாமி எங்கே? ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகிய நாலு பேர் உங்கள் உலகில் இருக்கிறார்கள். எனக்கோ சிவகாமி ஒருத்திதான் இருக்கிறாள்! அவளைக் கொடுத்து விடுங்கள்!" என்று கேட்பேன்.

சிவகாமி! சொர்க்கலோகத்தில் நீ இல்லா விட்டால் அதோடு உன்னை விட்டுவிட மாட்டேன். பிரம்மலோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய உலகங்களில் எங்கே நீ இருந்தாலும் உன்னைத் தேடி வந்து கண்டுபிடிப்பேன். அப்புறம் திரிமூர்த்திகளாலும் உன்னை என்னிடமிருந்து பிரிக்க முடியாது! வருகிறேன், சிவகாமி, வருகிறேன்! கூடிய விரைவில் நீ இருக்குமிடம் வருகிறேன்!

(தொடரும்)

# மகிழ்ச்சி மிக்க மணமகளாகும் எழில்மிகு மாலாவுக்கு வயது 22.






மினுமினுப்பான
அவள் சருமத்தை,
இயல்பாகவே
தூய நறுமணம்
கொண்டு
பாதுகாக்கும் சோப்

## மைசூர் சாண்டல்

உங்கள் சருமம் மாசு மறுவற்று
மிருதுவாக மிளிர
மைசூர் சாண்டல் சோப்.

தயாரிப்பாளர்கள்:
கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்.



பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இன்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர் -
பம்பாய் - புதுடில்லி - கல்கத்தா - சென்னை - செகந்திராபாத்

MCA/MSIL/55/2.

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட். D. கோபாலாசார்லுவின்

ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட் — சென்னை-17.

மூல நோயை
முற்றவிடாமல்
நம்பிக்கையான
ஹெடன்ஸா
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

அரிய வாய்ப்பு

20% தள்ளுபடி!!!

புகழ்பெற்ற சாஸ்திரியார் பட்டு ஜவுளி தினுசுகள் 9-12-1974 முதல் கைவசமுள்ள ஸ்டாக் தீரும் வரை 20% தள்ளுபடி செய்து விற்கப்படுகின்றன.

நல்ல ரகங்களுக்கு முந்திக் கொள்ளுங்கள்.

A. சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்
உயர்தர பட்டு ஜவுளி உற்பத்தியாளர் & வியாபாரி
28, வடக்கு மாட வீதி - மயிலாப்பூர் - மதராஸ் - 4
ஸ்தாபிதம்: 1902 போன்: 71719



# வயலினை வரவேற்றோம்!

**இன்று கர்நாடக சங்கீதக் கச்சேரிகளின் இன்றியமையாத அம்சமாகி விட்டது வயலின். ஆனால் அது மேனாட்டு வாத்தியம். அது எப்படிக் கர்நாடக சங்கீதத்துக்கு அனுசரணையாக வந்து சேர்ந்தது? இது பற்றி லால்குடி திரு ஜெயராமனைக் கேட்டோம். படிப்படியாகப் பல முன்னேற்றங்களைப் பெற்ற வயலினுக்கு வித்தாக அமைந்தது நம் நாட்டில் இருந்து வந்த ஒரு வாத்தியம்தான் என்றார் அவர்!**

**"வயலின் தோன்றிய வரலாற்றினைச் சுருக்கமாகக் கூறுவீர்களா?"**

இன்று நாம் காணும் வயலின் ஆரம்பத்தில் இவ்வடிவம் கொண்டிருக்கவில்லை.

பழங்கால மனிதர் வேட்டையாடிக் களைத்திருக்கும் சமயம், தமது வில்லில் நாணைப் பூட்டியுள்ள நரம்பினை விரலால் மீட்டி அதனின்றும் எழும் ஒலியைக் கேட்டு மகிழ்ந்தனர். பின்னர், பல நரம்புகளை அமைத்து, விரலால் மீட்டப்பெறும் (Plucked) ஹார்ப் (Harp) போன்ற இசைக் கருவிகளை உருவாக்கி அதனின்று எழும் பலவித ஒலி வேறுபாடுகளைக் கேட்டு மேலும் ஊக்கம் அடைந்தனர். ஆராய்வு மனம் கொண்ட மனிதர் நாளடைவில் விரலால் மீட்டுவதோடல்லாமல், வில் (Bow) எனும் உப கருவியை உருவாக்கி, அதனை உபயோகிப்பதன் மூலம் தொடர்ச்சியான நீடித்த ஒலியை (Continuity of Sound) இசைக் கருவியில் பெற முயன்று வெற்றி கண்டனர்.

வெளிநாட்டறிஞர் Engel (1874) வில்லினால் வாசிக்கும் முறை இந்தியாவில் 2000 வருடங்களுக்கு முன்பே இருந்து வந்தது எனக் கூறுகிறார். மற்றொரு மேலைநாட்டு அறிஞர் Sonnerat (1782) நம் நாட்டில் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்பு வில்லினால் இசைக்கும் 'ராவணாஸ்திரம்' என்னும் வாத்தியம் வழங்கி வந்ததாகக் கூறுகிறார். இவ்விதம் நம் நாட்டில் உருவாகி வழங்கி வந்த ராவணாஸ்திரம் காலப் போக்கில் மறைந்து, மேனாடுகளில் பல அறிஞர்களின் ஆராய்ச்சியில் பல மாறுபாடுகளை அடைந்து, இறுதியில் முழு வளர்ச்சியுற்று மறு உருவில் தற்காலம் வழங்கி வரும் வயலினாக நம் நாட்டுக்குத் திரும்பவும் வந்தது. வயலின் வகை இசைக் கருவிகள் நான்கு. வயலினிலும் பெரியது 'வயோலா' (Viola) : அதனினும் பெரியது (Cello) : அதையும்விடப் பெரியது (Bass).

**"முதன்முதலில் வயலினை உருவாக்கியவர் யார்?"**

பதினாறும் நூற்றாண்டில் இத்தாலியில் வாழ்ந்த Andreas Amati (1505 – 1580) எனும் கலைஞரே முதலில் உருவாக்கினார். இதன் பிறகும் சில நுண்ணிய முன்னேற்றங்கள் படிப்படியாக அந்த வாத்தியத்தில் ஏற்பட்டன. பதினேழாம் நூற்றாண்டில் Antonio Stradivari (1644 – 1737)யின் கைத் திறனில் முழுமை பெற்று உருவாகிய வயலின்களே ஈடுஇணையிலாத புகழ் பெற்றன.

**"மேலை நாட்டவர் வயலினைக் கையாள்வதற்கும், நாம் கையாள்வதற்கும் உள்ள வேறுபாடு என்ன?"**

மேலை நாட்டவர் நின்றவண்ணம் தோளில் வைத்து வாசிப்பார்கள். நாம் உட்கார்ந்து தண்டின் முனையைக் காலில் தாங்கிக் கொண்டு, வயலினை மார்பில் சாய்த்து வைத்து இசைக்கிறோம். சுருதி அமைப்பு (Tuning) வைத்துக் கொள்ளும் முறை (Holding posture) வாசிக்கும் முறை (Playing method) இம்மூன்றிலும் நம் இசைக்கும், வசதிக்கும் ஏற்ப மாறுதல்களைச் செய்து கொண்டுள்ளோம்.

**"இன்று கர்நாடக சங்கீதத்துக்கு இன்றியமையாததாக விளங்கி வரும் இம் மேலை நாட்டு வாத்தியம் வாய்ப்பாட்டுக்கு உகந்த பக்கவாத்தியமாகவும் தனிக் கச்சேரிக்குத் தகுதி வாய்ந்ததாகவும் எவ்விதம், யாரால் சிறப்புற்றது?"**

நம் நாட்டில் பழங்காலத்தில் வாய்ப்பாட்டுக்கு உதவியாக வீணை, கோட்டுவாத்தியம், குழல் முதலியவைகளைத்தான் உபயோகித்து வந்தனர். கர்நாடக சங்கீதத்துறைக்குச் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னர் வந்த வயலின், பக்கவாத்தியமாக நூறு வருடங்களுக்கு மேல் கையாளப்பட்டு வருகிறது.

ஆங்கிலேயரின் ஆட்சியில்தான் வயலின் நம் நாட்டுக்குள் நுழைந்தது. அந்நாளில், தஞ்சையில் ஆங்கிலத்தில் தேர்ச்சியும், இசை ஞானமும் கொண்ட உத்தியோகஸ்தர் ஒருவர் இருந்தார். அவர் அரசாங்க அலுவல் காரணமாக ஆங்கிலேய கவர்னரைச் சந்திக்கச் சென்னை வந்தார். அச்சமயம் கவர்னரின் மாளிகையில், மேனாட்டு இசைக் கருவிகளான வயலின், பியானோ (Piano) முதலியவற்றை அவர் காண நேர்ந்தது. அவருக்குக் கவர்னரிடம் இருந்த நட்பினால் அவ்வாத்தியம்

புகைப்படம் : பழங்காலத்திய வயலினைப் பற்றிக் கூறும் ஜெயராமனின் அந்த நாளையப் படம்!

களை வாசித்துப் பார்க்க வாய்ப்பும் கிடைத்தது. முதலில் பியானோவின் இனிமை நிறைந்த ஒலியையும், ஸ்தாயி விஸ்தீரணத்தையும் கண்டு வியந்த அவர் அடுத்து, வயலினில் நம் இசைக்கேற்பச் சுருதி சேர்த்து (Tuning) வாசித்துப் பார்த்த பொழுது நம் சங்கீதத்துக்குத் தேவையான அசைவுகளும் குழைவுகளும் வயலினில் மட்டுமே கிடைக்கும் எனக் கண்டு கொண்டார். வயலின் கர்நாடக சங்கீதத்துக்குப் பெரிதும் பயன்படும் என்பதையும் உணர்ந்தார். அவர் வாசித்துப் பார்த்த வயலினை அவருக்குப் பரிசாகவே வழங்கி விட்டார், கவர்னர்!

நாளடைவில் அவருக்குத் தெரிந்த பாட்டுகளையெல்லாம் வயலினில் வாசித்துத் திருப்தியடைந்து, வயலினை வாய்ப்பாட்டுக்குப் பக்கவாத்தியமாகவும் பயன்படுத்தத் தொடங்கினார் என்பது கர்ண பரம்பரையாக வந்த வரலாறு.

ஆதாரபூர்வமாகப் பார்த்தால் முத்துஸ்வாமி தீட்சிதரின் சகோதரரான பாலுஸ்வாமி தீட்சிதர் ('1786–1858) வயலினை முதன் முதலில் கற்றுத் தேர்ந்ததாகத் தெரிகிறது. அதைத் தொடர்ந்து வடிவேலு (1810-1847) பொன்னுஸ்வாமி முதலானோர் வயலினைக் கையாண்டு கர்நாடக இசையுலகில் வயலினின் புகழ் பெருக உதவினர். கர்நாடக சங்கீதத்தில் வயலினுடைய வரலாற்றைப் பற்றிச் சிந்திக்கும்போது, முதன் முதலில் தனி வயலின் கச்சேரி செய்து தனக்கும், வயலினுக்கும் புகழ் தேடிய திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர் (1854–1912) அவர்களின் சாதனையை நினையாமல் இருக்க முடியாது.

நாத இனிமை, காத்திரம் (Volume) அதற்கும் மேலாக, இடைவிடாத தொடர்ச்சியுடன் இசையை வெளியிட வசதி (Continuity of Sound) ஆகிய சிறப்பியல்புகளை வயலின் பெற்றிருப்பதால், நம் சங்கீதத்தின் அடிப்படையான கமகங்களையும், குழைவுகளையும், குரலினின்று வெளிப்படும் உணர்ச்சி நிரம்பிய இசை வடிவங்களையும், தன்மை மாறாமலும் அழகு குன்றாமலும் அதன் மூலம் இசைக்க முடிகிறது. இச் சிறப்பியல்புகளினாலேயே வயலின் கர்நாடக இசை உலகில் இன்றியமையாததான ஓர் இடத்தைப் பெற்றிருக்கிறது.

பேட்டி: **பரணன்**

# இசையிலும் காதல்; இதயத்திலும் காதல்!



இளம் தலைமுறைப் பாடகர்கள் அனைவருக்கும் வாழ்த்துக் கூறி அவர்களின் பிரதிநிதிகளாக ராமச்சந்திரன் — சாரு தம்பதியை மிக்க மகிழ்ச்சியுடன் இன்னிசைச் சிறப்பிதழின் மேலட்டையில் பிரசுரிக்கிறோம். இவர்கள் இசைமீது கொண்ட காதல் இதயத்திலும் பரிணமிக்கத் திருமணம் புரிந்துகொண்டவர்கள். கணவனைப் பற்றி மனைவியிடமும் மனைவியைப் பற்றிக் கணவனிடமும் கேட்டோம். இதோ அவர்கள் பேசுகிறார்கள்:

சாரு: இவருக்கும் சரி, எனக்கும் சரி; இந்தச் சங்கீதம் அம்மா வழிச் சொத்து. இரண்டு பேருமே சிறு பிராயத்தில் சங்கீதம் கற்றுக் கொண்டது அம்மாவிடத்தில்தான்! இவர் பதினொன்றாவது வயதிலேயே கச்சேரி செய்திருக்காராம். வர்க்கலை சுப்பிரமணிய ஐயர், திருப்புனித்துறை கிருஷ்ணய்யர் இரண்டு பேரிடமும் சிட்சை பெற்றார். ஆனாலும் இவர் ஓர் ஏகலைவன்: இவருக்கு மானசிக குருவாக விளங்கியவர் மூன்றெழுத்தில் பிரபலமான ஜி. என். பி.

ராமசந்திரன்: எங்களுக்குள் ஓர் ஒற்றுமையைப் பாருங்கள். இவள் ராமநாதபுரம் கிருஷ்ணனிடம் ஓராண்டு பயிற்சி பெற்றாள் என்றாலும் முழுச் சிட்சை பெற்றது மூன்றெழுத்துப் புள்ளியிடம்தான்! எம். எல். வி.யோடு இன்றும் சேர்ந்து பாடுகிறாள். தன் தங்கைகளின் நடனத்துக்குப் பாடவும் செல்கிறாள்!

சாரு: கெமிஸ்ட்ரியைப் பிரதான பாடமாக எடுத்து பி. எஸ்ஸி தேறிய இவர் உத்தியோக நிமித்தம் சென்னைக்கு வந்தார். கன்னிக்கோட்டையில் மெடிகலுக்கு இடம்கூடக் கிடைத்தது. அவ்வளவையும் மீறி இசை இவரை ஜி. என். பியிடம் சேர்த்துவிட்டது. மத்திய அரசு உபகாரச் சம்பளம் பெற்று இரண்டு ஆண்டுகள் இவர் வசந்தகுமாரியிடம் பயிற்சி பெற்றதுகூட உண்டு!

ராம: சாருவும் ஒரு பட்டதாரிதான். சங்கீதத்தைப் பாடமாக எடுத்துக் கொண்டு பி. ஏ. தேறியிருக்கிறாள். 1971ல் ஜூனியர் பாடகர்களின் முதற் பரிசையும் பெற்றிருக்கிறாள்!

சாரு: இவரும் மியூசிக் அகாடமியில் சிறப்புப் பரிசு பெற்றவர்தான். செம்பையின் ஊக்கம் பெற்று இவர் குருவாயூரப்பன் சுப்ரபாதம் ரெக்கார்டு கொடுத்திருக்கிறார். இவர் செய்த இன்னொரு பெரிய காரியம் என்ன தெரியுமோ? நாராயணீயத்தைப் பத்து எல்.பி.க்களாகக் கொடுத்திருக்கிறார். இவற்றுக்கு மெட்டு அமைத்தவர் ஸ்ரீ என். வெங்கட்ராம் அவர்கள்.

பொதுவாகத் திருமணத்துக்கு ஜாதகப் பொருத்தத்தில் ஆரம்பிப்பார்கள். சாரு—ராமச்சந்திரனைப் பொறுத்தவரையில் மனப் பொருத்தம் இருந்தது; இசைப் பொருத்தம் கூடியது; தோற்றப் பொருத்தமும் இருப்பதை அட்டைப் படம் நிரூபிக்கிறது.

# ஒற்றர் ஜாக்கிரதை — சென்ற இதழ் தொடர்ச்சி

ஆசிரியை சொல்லித் தந்தபடி ஒளிந்திருந்து அந்தச் சிறுவர்கள் உலகின் முதல் டாங்கியை பிரிட்டன் பரிட்சித்துப் பார்ப்பதைக் கண்டனர்.



பின்னர்....




அவர்கள் தந்த விவரத்தை வைத்து ஜெர்மனிக்கு சங்கேத மொழியில் கடிதம் எழுதினாள் அன்னா.




கடிதத்தைப் பெற்ற ஜெர்மானிய ராணுவ அதிகாரி....




ஆனால் விரைவில் பிரிட்டனின் டாங்குப் படை யுத்த களத்தில் ஜெர்மானிய ராணுவத்தைச் சின்னா பின்னம் செய்தது!



தன் கடிதத்தை அலட்சியம் செய்த ஜெர்மானிய அதிகாரிக்கு அன்னா மரியா சீக்கிரமே ஒரு பரிசு அனுப்பினாள்.



ஒற்றர் வேட்டை 4

தொகுப்பு: நாகேடராஜ் சித்திரம்: ராஜ்

ஒற்றடலுக்கு அழகிய பெண்கள் பயன் படுவது போலவே ஆண்களும் அழகால் காரியங்களைச் சாதித்த துண்டு. கன்னியர் மயங்கும் அழகன் சால்னாவ்ஸ்கி. போலந்திலிருந்து வந்து பெர்லினில் வசித்தான்.



அவனிடம் மயங்கினாள் ஹெலன். செல்வமும் செல்வாக்கும் மிக்க ஜெர்மானிய பிரபுவின் மனைவி.




ஹெலன்! என்னைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?

உன் காதல் எனக்குக் கிடைத்திருப்பது தெரியும் அது போதுமே!

ஒரு வேளை நான் ஓர் ஒற்றனாகக் கூட இருக்கக் கூடுமல்லவா?

நான் எதற்கும் துணிந்திருக்கிறேன். உன் அன்பு மட்டும் வற்றாமல் பெருகட்டும்.

சொக்கிப் போன ஹெலன் அவனது ஒற்றடலுக்கும் உதவினாள்!

என் உறவுக்காரி நட்ஸ்னர் யுத்த மந்திராலயத்தில் ஸ்டெனோ. பணத்தாசை காட்டிப் பார்க்கலாம்!

அபார யோசனை! அவள் டைப் அடிக்கும் கடிதங்களின் கார்பன் காகிதங்களை மட்டும் பர்ஸில் மடித்துப் போட்டுக் கொள்ளச் சொல்லு, யாரும் பாராத போது. ஒவ்வொரு கடிதத்துக்கும் புதுப் புது கார்பன் தாள்கள் பயன் படுத்தச் சொல்!

நட்ஸனரிடமிருந்து கிடைத்த கார்பன் தாள்களை இரவில் ஆராய்ந்து பல தகவல்களைப் போலந்துக்கு அனுப்பினான் சாஸ்நாவ்ஸ்கி.




நட்ஸனர் தனக்குக் கிடைத்த பணத்தால் ஆடம்பர வாழ்க்கை நடத்தினாள்.




சந்தேகம் எழுந்து காரியாலயத்தில் விசாரணை நடந்த போது...







ஆனால் இத்தகைய மட்டமான பதிலைத் தன் தாயாரிடம் அவளால் கூற முடியவில்லை. கிராமத்திலிருந்து பெர்லின் வந்த தாயிடம் வேறு ஒரு பொய் பேசினாள்!







தொடரும்

# பேபி ஃபுட் பற்றுக்குறை யிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்**

குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும், உணவு தயாரிக்கும் போது, பேபி ஃபுட்




*ஒரு ஸ்பூனும், எளிதில் ஜீரணமாகும் பாலமுல் ஒரு ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத் தொடங்குங்கள். பிறகு படிப்படி யாக அதிகமாக்கி, பேபி ஃபுட் பாதியும், பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.

**ஸ்பூனுல் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன் பாலமுல் கலந்து பசைபோல் ஆக்குங்கள். சுவைக்கு வேண்டிச் சர்க்கரை சேருங்கள். காலையில் பாட்டிலில் கொடுப்பதற்குமுன்

RADEUS/BA/IR.




இதை ஸ்பூனுல் ஊட்டுங்கள். படிப்படியாய், ஒரு நாளைக்கு 2, 3 தடவைகளாக பாலமுலை, பழச்சாறு, பருப்பு, முட்டை, இவைகளோடு கொடுத்து, சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

100 கிராம். அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம் |
| வைட்டமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைட்டமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைட்டமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைட்டமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைட்டமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நியாஸினமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைட்டமின் C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்

பாலுடன் கூடிய தானிய உணவு
ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே



கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

# வழித்தோன்றலின் தனிக்கச்சேரி



தாயார் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுடனேயே நான்கு வயது முதல் இதுநாள்வரை சேர்ந்து பாடிக் கொண்டு வந்த ராதா தனிக் கச்சேரி செய்ய வேண்டிய ஒரு நிர்ப்பந்தச் சூழ்நிலை அண்மையில் ஏற்பட்டது.

ஸ்ரீ எச். வி. ஆர். ஐயங்கார் பொறுப்பில் சென்னையில் நடந்த ஒரு மகாநாட்டின் முடிவில் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரி நடப்பதாய் இருந்தது. ஆயின் துரதிர்ஷ்டவசமாக ஸ்ரீமதி எம். எஸ். தமது சகோதரரை இழந்து துக்கம் காக்க வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்து விட்டது. எனவே ஸ்ரீ சதாசிவம், ஐயங்கார் அவர்களிடம் நிலைமையை விளக்கி, ''வேணுமானால் ராதாவைப் பாடச் சொல்கிறேன். இல்லை, நீங்கள் வேறு ஏதேனும் ஏற்பாடு செய்து கொள்வதானாலும் சரி'' என்றார்.

''வேறு ஏற்பாடாவது ஒன்றாவது? ராதா தான் பாடவேண்டும்!'' என்று எச். வி. ஆர். சொல்லிவிட்டார்.

ராதாவின் இந்த அரங்கேற்றக் கச்சேரிக்கு மகாநாட்டுப் பிரதிநிதிகள் மட்டுமின்றி நண்பர்கள் பலரும் அழைப்புப் பெற்று வந்திருந்தனர். தாஸப்பிரகாஷ் ஹோட்டலில் சுமார் நூறுபேர் அமரக்கூடிய சிறிய அரங்கம் இரண்டு மணி நேரத்துக்கு இருந்த இடம் தெரியாமல் போயிற்று! ஆம், கண்ணை மூடிக் கொண்டால், 'அகாடமி அரங்கிலோ அண்ணாமலை மன்றத்திலோ எம். எஸ்ஸின் கச்சேரியைத்தான் கேட்டுக் கொண்டிருக்கிறோமோ' என்ற பிரமை ஏற்பட்டு விட்டது. சுருதி சேர்த்துக் கொண்டு 'ஓம் நம: பிரணவார்த்தாய' என்று ஆரம்பித்தது முதல் லோக க்ஷேமார்த்தம் ஆசார்யாள் வழங்கிய 'மைத்ரீம் பஜத' என்ற ஆசி கீதத்தை இசைத்ததுவரை அப்படியே எம். எஸ். பாணி!

ஸ்ரீமதி எம். எஸ்., சிஷ்யைகள் என்று யாரையும் ஏற்றுக் கொள்ளவில்லையே என்று வருத்தப்படுகிறவர்கள் பலருண்டு. ஆனால், அன்றைக்கு மகளும் பிரதம சிஷ்யையுமான ராதாவிடம் எம். எஸ்ஸின் தெய்விகக் கலை அப்படியே குடியேறியிருக்கிறது என்பதை அறிந்து பரவசமடைந்தோம்.

மகாநாட்டுப் பிரதிநிதிகள் பலர் வடநாட்டுப் பிரமுகர்கள். எனவே பஜன்கள் நிறையப் பாடினார் ராதா விசுவநாதன். அவற்றின் நெளிவு சுளிவுகள், குழைவுகள் எல்லாம் ரொம்பத் தரம். என்றாலும் ராதா ரேவாணி ராகத்தை ஆலாபனை செய்தபோதுதான் சிலிர்த்துப் போனோம். 'அடேயப்பா! இத்தனை ஆற்றலையும் இவரால் எப்படிக் கட்டுப்பெட்டியாக அடக்கி வைத்துக் கொண்டிருக்க முடிகிறது?' என்று வியந்தோம்.

பக்கவாத்தியம் வாசித்த வி. வி. சுப்பிரமணியமும் காரைக்குடி மணியும் தங்கள் முழு ஒத்துழைப்பையும் நல்கினர். வி. வி. எஸ். மேடையில் உட்காரும்போதே ஒரு கம்பீரம் இருக்கும்! வாசிப்பும் அப்படித்தான். எம். எஸ்ஸுக்கு வாசித்து வாசித்து அந்தப் பாணி அவருக்கு அத்துப்படி யல்லவா? அழுத்தமாக 'போ' போடுவதிலேயே ஒரு துணிச்சல் விகசிக்கும். அதுமட்டும் இருந்தால் போதுமா? வி. வி. எஸ்.ஸின் ஆற்றல் அந்தத் துணிச்சலுக்குக் கைகொடுக்கும்போது நமது செவிப் புலன்களுக்கு அரியதொரு விருந்து கிடைக்கிறது. காரைக்குடி மணியின் வாசிப்போ கனகச்சிதம். தொப்பியில் அவர் எழுப்பும் அடுக்கடுக்கான கும்கார ஒலிகள் கச்சேரிக்கு அலாதியான சோபை அளிப்பன.

ஸ்ரீமதி ராதா இனி தனிக் கச்சேரி செய்வாரோ அல்லது அம்மாவுடன் பாடுவதிலேயே திருப்தி அடைந்து விடுவாரோ அது நமக்குத் தெரியாது. ஆனால் அன்று அவரது அரங்கேற்றம் அபாரமாய் அமைந்தது தெரியும்.

'எல்லாம் சரிதான், உதவுபடியான இனிய சாரீரம் இருக்கலாம், எம். எஸ்ஸுடன் பாடிப் பாடி அவரது ஆற்றலைப் பெற்றிருக்கலாம், அவரது பாணியை அப்படியே பின்பற்றவும் செய்யலாம், ஆனால் எம். எஸ்ஸின் அந்த பக்தி பாவம்? அதற்கு எங்கு போவது?' என்ற ஒரு நியாயமான கேள்வி எழுவது இயல்பே. இத்தனை சிறப்புக்களைத் தாயாரிடமிருந்து பெற்றுள்ள ராதா நாளடைவில் அதையும் பெறாமலா விடுவார்?

— குட்டி கிருஷ்ணன்

மேலே: வழக்கமான கச்சேரி; இங்கே: தனிக் கச்சேரி!



# பயமுறுத்தும் அஜீரணமா?

உடன் நிவர்க்க
ஹ்யூலட்ஸ் மிக்ஸ்சர்
அருந்துங்கள்.
மீண்டும்
முன்போல்
சாப்பிடத்
தொடங்குங்கள்



C.J. ஹ்யூலட் அண்ட்
சன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்
சென்னை 600 002,
கல்கத்தா 700 001

SAA/CJH/1191



சுவை, மணம், தரம் நிறைந்தது!
அறுசுவை உண்டிக்கு ஏற்றது எங்கள்

# செண்பகம்

பிராண்டு



REGD. MARK

## அக்மார்க் நெய்

16, 4, 2, 1, ½ (500 கிராம்)
டின்களில் கிடைக்கும்

தயாரிப்பாளர்கள் :

## M/s. தனலக்ஷ்மி & கோ.

21(B), M. G. புதூர் 1-வது வீதி
திருப்பூர் - 638604

தந்தி :
PEEVIKEYAR

போன் :
ஆபீஸ் : 21557
வீடு : 21557A, 2156T



ஸ்வாமியே சரணம் ஐயப்பா



சபரிமலை யாத்திரை செய்வோருக்கு ஓர் நற்செய்தி!

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் 777 பிராண்ட்




(REGD.)

'திடீரெக்ஸ்' Dhideerex (FOR INSTANT PREPARATION) 'திடீர்' சாம்பார் கேக் - ரசம் கேக்

• புளியோதரை மிக்ஸ் • கருவேப்பிலை பொடி • பருப்புப் பொடி

மற்றும் அநேகவித ஊறுகாய்கள், ருசிமிக்க திடீர் மிளகு ரசம் பேஸ்ட்

மேற்படி உணவுப் பொருள்களை வடித்த சாதத்துடன் கலந்து நல்லெண்ணெய் அல்லது நெய் சேர்த்தால் ருசிமிக்க உணவு தயார் (சாம்பார் சாதம், ரசம் சாதம் போன்றது.)

எருமேலியில் பேட்டை துள்ளின பின்னர், தேவஸ்தானத்தில் விற்கும் வெள்ளை நைவேத்தியம் (சமைத்த சாதம்) வாங்கி அத்துடன் மேற்படி சாம்பார் கேக் முதலியன வற்றைத் தேவைக்கு ஏற்ப சேர்த்தால் ருசிமிக்க உணவாகும்.
இதேபோன்று மஹா சன்னிதானத்திலும் சமைத்த சாதம் வாங்கி உபயோகிக்கலாம்.
மிக சிக்கனமானது சிரமமின்றி தயாரிக்கவல்லது.

தயாரிப்பாளர்கள் : R. S. N. அய்யர் & R. S. G. அய்யர் உரிமையாளர்கள்.

## ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.

46, தம்பு செட்டித் தெரு. (போன் : 20401) சென்னை - 600001

# கீர்த்தனைக் கதைகள்

எஸ்.வி.கே.

மஞ்சுநாத்தின் அறுபத்தைந்தாவது பிறந்தநாள். வாழ்த்துக்களையும், பெரும் மாலைகளையும், பூங்கொத்துக்களையும் தாங்கி வந்து கொண்டிருந்தவர்களுக்குக் கணக்கே இல்லை.

''மிஸ்டர் மஞ்சுநாத்! பிறந்த தின வாழ்த்துக்கள்!'' என்று அசடு வழிய இளித்துக் கொண்டே பெரிய மாலையை அவர் கழுத்தில் போட்டுக் கையில் பூங்கொத்தைக் கொடுத்து நின்றார் கருணாகரன்.

''என்ன கருணாகரன்! நீங்கள் கூட இம் மாதிரி செய்ய ஆரம்பித்து விட்டீர்கள்! எனக்கு இவையெல்லாம் பிடிக்கவே பிடிக்காது என்று உங்களுக்குத் தெரியாதா?'' என்று கடிந்து கொள்ளும் பாவனையில் கருணாகரனைத் தழுவிக் கொண்டார். கருணாகரனும் அவரைக் கட்டிக் கொண்டே ''உங்களுக்கு இவை பிடிக்காது என்றுநன்றாய்த் தெரியும், ஸார். ஆனால் எங்கள் விருப்பம் என்று ஒன்று இருக்கிறதே. அதற்கு நீங்கள் கட்டுப் பட்டுத்தான் ஆகவேண்டும். அந்த விஷயத்தில் உங்களுக்கு உரிமை எதுவும் இல்லை. நாங்கள் சொல்கிறபடி இன்று நடக்கத்தான் வேண்டும்!'' என்று வெகு உரிமையோடு உதட்டு மட்டில் அன்பு ததும்பும் சொற்களைச் சிதறினார்.

சற்றுநேரம் கழித்துக் கருணாகரனின் கார் அந்த வீட்டுப் பங்களாவை விட்டு வெளியே வந்தது.

''இந்த மாதிரி எத்தனை பிறந்த தினங்களை அவரும் 'கொண்டாடி'யிருக்கிறார், நாமும் காணிக்கை செலுத்தி வந்திருக்கிறோம்! எல்லாம் வேஷம்தான்'' என்றார் கருணாகரன் பக்கத்திலிருந்த தம் மனைவியிடம்.

''இவ்வளவு வேஷம் போடுகிறீர்களே, ஒரு பைசாவுக்கு ஏதாவது பிரயோசனம் உண்டா? அவர் உங்களுக்கு என்ன செய்து விட்டார்?''.

''அவர் ஒன்றும் செய்யவேண்டாம், லக்ஷ்மி! கெடுக்காமல் இருந்தால் அதுவே போதும். அதற்குத்தான் மாலை, ஆலிங்கனம், புகழ்ச்சி எல்லாம்!'' என்றார் கருணாகரன்.

கார் ஹாரனை டிரைவர் விடாமல் சப்தித்தார். எதிரே ஒரு கூட்டம் போய்க்கொண்டிருந்தது. ''என்ன, அரசியல் ஊர்வலமா?'' என்று டிரைவரைக் கேட்டார்.

''இல்லீங்க, ஏதோ சாமி ஊர்வலம்போல் இருக்கு'' என்று ஹாரனை அழுத்தினான்.

ராமர் பட்டாபிஷேகப் படத்தை அலங்கரித்து நான்குபேர் சுமந்து போய்க் கொண்டிருந்தனர். நாகஸ்வரக்காரர் பாட்டு காதில் ஒலித்தது.

ராகம்: நீலாம்பரி தாளம்: ஆதி

பல்லவி

என்னக மனஸுகுரானி
பன்னக சாயி ஸொகஸு
பன்னுக கனுகொனனி கன்னுலேலே
கன்னுலேலே கன்டி மின்னுலேலே

சரணம்

மோஹமுதோ நீலவாரி
வாஹத காந்தினி கேனி
ஸ்ரீஹரினி கட்டி கொனனி தேஹமேலே
தேஹமேலே ஈ கேஹமேலே

ஸரஸிஜ மல்லே துளஸி
விரவாஜி பாரிஜாத
விருலசே பூஜிஞ்சனி கரமுலேலே
கரமுலேலே ஈ காபுரமுலேலே

மாலிமிதோ த்யாகராஜு
நேலின ராமமூர்த்தினி
ஸாலிஞ்சி பொகடனி நாலிகேலே
நாலிகேலே ஸத்ர மாலிகேலே.

(நாகத்தின் மேல் பள்ளியாய் இருக்கும் பரந்தாமனைக் காணாத கண்ணென்ன கண்ணே! நீலமேக காந்தியுடைய ஸ்ரீஹரியைத் தழுவாத தேகமென்ன தேகமோ! மலர்கொண்டு பூஜை செய்யாதகை என்ன கையோ! தியாகராஜன் வழிபட்ட ராமன் நாமத்தை பூஜிக்காத நாவென்ன நாவோ!)



# தனிமையின்
# இனிமை—லக்ஷ்மியுடன்

உதயத்தின் இளங்குளிரில், என் அறையின் தனி அமைதியில், போக்குவரத்தின் கூவல் ஒலியில், நள்ளிரவின் மிருதுத் தன்மையில்... நீ எங்கும் எப்போதும் உடனிருக்கிறாய் லக்ஷ்மி.

அன்புக்குரிய லக்ஷ்மி, மனங்கவர் லக்ஷ்மி, மகிழ்ச்சி நிறை லக்ஷ்மி—இப்படி நீ எனக்குப் பலவாக விளங்குகிறாய்.

லக்ஷ்மி, நீ பருத்தியின் குளுமை, பாப்ளினின் மென்மை, பாலியஸ்டர் கலவைகளின் நாகரிகக் கவர்ச்சி...

லக்ஷ்மி, கிளர்ச்சியூட்டும் நிறங்கள், அடக்கமான வண்ணங்கள், தன்னிச்சையான கோடுகள், கட்டங்கள், இழைச் சேர்க்கைகள் இவற்றின் துணைகொண்டு என்னை நீ பிரமிக்கச் செய்கிறாய்.

லக்ஷ்மி — இன்றுபோல் என்றும் இணை பிரியாமல் இருந்திடுவோம்.






SAA/LM/1443

® ரிஜிஸ்டர்ட் டிரேட்மார்க் லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட் கோயமுத்தூர் 641018

# இன்றையச் சிறப்பு அன்றே சோபித்தது!

**இந்நான்கு பக்கங்களில் உள்ளவர்கள் இன்று கர்நாடக சங்கீத உலகில் பிரபலமாயிருப்பவர்கள். யார் யார் என்று ஊகிக்க முடிகிறதா, பாருங்கள். பிறகு உங்கள் ஊகம் சரிதானா என்பதைப் படித்து உணருங்கள்.**



மாலி மகிழ்ந்தார்!

சிக்கில் சிங்காரவேலன் சன்னதியிலிருந்து இனிமையாகக் குழலோசை பரவியது. எட்டு வயதுச் சிறுவன் அன்று தனது புல்லாங்குழல் திறமையை அங்கே அரங்கேற்றம் செய்து கொண்டிருந்தான்.

ஃப்ளூட் ரமணியின் பாட்டனார் ஆழியூர் நாராயணசாமி அய்யர் ஒரு புல்லாங்குழல் வித்வான். அவர் இட்ட வித்துத்தான், பேரனின் அரங்கேற்றமாக 1942ம் ஆண்டு திருக்கார்த்திகை தினம் சிக்கல் சன்னதியில் மலர்ந்தது.

பிறகு நாகப்பட்டினத்துக்குக் கச்சேரி செய்ய வந்திருந்த ஃப்ளூட் மாலியின் வாசிப்பைச் சிறுவன் ரமணி கேட்டான். அந்தக் கணத்தில் மாலிபோல் வாசிக்க வேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது. அதன் விளைவாகச் சில காலம் கழித்துத் திருவாரூர் கச்சேரிக்கு வந்திருந்த மாலியைச் சந்தித்து மாலியின் இசைத்தட்டில் வெளியாகியிருந்த பாட்டை அதே போல் வாசித்துக் காண்பித்தான். மாலிக்கு ஆனந்தம். ரமணியைத் தம் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார். அன்று தொடங்கிய வாசிப்பு ரமணியை அமெரிக்கா வரை கொண்டு சென்றது.



கச்சேரிக்கு மேல் கச்சேரி! படிப்புக்கு முழுக்கு!

பரம்பரையே தாளக்கட்டுப் பரம்பரை. அம்மாபேட்டை பக்கிரி என்ற அந்த நாளைய தவில் வித்வானின் பேரன். சிறுவன் உபேந்திரனின் விரல்கள் தோல் வாத்தியத்தில் வளைந்து கொடுத்து, லயமாக, நயமாகப் பேசியதில் ஆச்சரியம் இல்லை. தஞ்சாவூர் மிருதங்க வித்வான் வைத்தியநாதய்யரின் சிஷ்யர் ராஜம் ஐயரிடம் மிருதங்கம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தான்.

இவருடைய பதின்மூன்றும் வயதில் அரங்கேற்றம் தஞ்சாவூரிலேயே நடந்தது. தஞ்சாவூருக்கு ஒரு கச்சேரிக்கு வந்திருந்த செம்பை வைத்தியநாத பாகவதரைச் சிறுவன் உபேந்திரன் போய்ப் பார்த்தான். செம்பை உற்சாகத்துடன் பேசினார். ''இன்றைக்கு ராத்திரி என் கச்சேரியில் வாசிடா'' என்று உத்தரவும் போட்டுவிட்டார். கச்சேரியில் உபேந்திரனுக்குத் தனி ஆவர்த்தனத்துக்கும் சந்தர்ப்பம் கொடுத்து ஆதரித்தார். பையன் உபேந்திரன் அப்போது நாலாம் படிவம் தான் வாசித்துக் கொண்டிருந்தான். மிருதங்கம் அரங்கேற்றிய வேளை கச்சேரிக்கு மேல் கச்சேரி. படிப்புக்கு முழுக்கு! 1969ல் வீணை பாலசந்தருடன் பிரான்ஸ், பெல்ஜியம் நாடுகளில் தம் மிருதங்க நாதத்தை எழுப்பினார். அப்புறம் ஆறு தடவைகள் வெளிநாடுகளுக்கு விஜயம் செய்துவிட்டார்!

தென்காசி வள்ளிநாயகம் பிள்ளையின் புதல்வி ரத்தினத்துக்கு ஏழு வயதிலேயே சாரீரத்தில் பிருக்காக்கள் புரண்டன. அந்த நாளில் பிரபலமாக இருந்த ராமலிங்க பாகவதரிடம் சிட்சை பெற்றார்.

திரைப்பட இயக்குனர் காலஞ்சென்ற கே. சுப்பிரமணியம் ஒரு சமயம் ஜெமி ரத்தினத்தின் 'கணீர்'க் குரலைக் கேட்டுவிட்டு அவருடைய 'பக்த சேதா' படத்துக்குப் பாடச் சென்னைக்கு அழைத்து வந்து விட்டார். ரத்தினத்துக்குப் பத்து வயது. சினிமாத் துறை அவருடைய

''பொம்மனாட்டி இட்டப்பா!''



சாஸ்திரீய சங்கீத ஆர்வத்தைப் பாதிக்கவே இல்லை. அதில் முழு ஆர்வம் காட்டி வந்தார். இவருடைய பன்னிரண்டாவது வயதில் இலங்கையில் முதல் இசைக் கச்சேரி நடந்தது. அதுதான் இவருடைய அரங்கேற்றம். அப்போதே அவர் ராமநாதபுரம் கிருஷ்ணனிடம் சிஷ்யையாக அமர்ந்து விட்டார்.

''உனக்கென்னம்மா! நீ ஒரு பொம்மனாட்டி இட்டப்பா!'' என்று இவருடைய குருநாதர் ராமநாதபுரம் கிருஷ்ணன் அடிக்கடி சொல்லுவாராம்!



கடிகாரம் தோற்றது !

ஆந்திர நாட்டில் பாருபள்ளி ராமகிருஷ்ணையா பந்துலு என்று ஒரு மகா வித்வான். அவருடைய குரு நட்சிணாமூர்த்தி சாஸ்திரி என்பவர். தம் குருநாதர் ஞாபகார்த்தமாக ஆண்டுதோறும் பாருபள்ளி ராமகிருஷ்ண பந்துலு ஒரு சங்கீத உற்சவத்துக்கே ஏற்பாடு செய்து விடுவார்.

அந்த ஊரில் எட்டு வயதுச் சிறுவன் ஒருவன் அற்புதமாகப் பாடுவான். அந்தப் பையனுக்கு இந்த இசை உற்சவத்தில் ஒரு வாய்ப்புக் கொடுக்க விரும்பினார்கள் நிர்வாகிகள். காலை 8—9 ஒதுக்கினார்கள்.

சிறுவன் பாட ஆரம்பித்தான், வர்ணம், ராக ஆலாபனை, கீர்த்தனைகள், ராகம், தானம், பல்லவி எல்லாம் கடல்மடை திறந்த வெள்ளமாக ஓடியது. யாரும் கடிகாரத்தைப் பார்க்கவில்லை. சிறுவன் பதினொரு மணி வரை பாடி முடித்தான். அடுத்து ஹரிகதை செய்யக் காத்திருந்த சூரிய நாராயண சாஸ்திரி ''சபையோர்களே! இந்தக் கர்ணாமிர்தமான இசையைக் கேட்டு ஆனந்தத்தில் மூழ்கியிருக்கும் உங்கள் கற்பனையை இப்போது என் நிகழ்ச்சியால் கலைக்க விரும்பவில்லை. பிறகு ஒரு சமயம் என் கதையை வைத்துக் கொள்ளலாம்'' என்று சிறுவனை ஆசீர்வதித்து ஒதுங்கிக் கொண்டார்.

அந்தச் சிறுவன் பாலமுரளி கிருஷ்ணாவுக்கு இதுவரை அவருடைய தந்தை பட்டாபிராமையாவேதான் குருவாக இருந்தார். இப்போது பாருபள்ளி ராமகிருஷ்ணய்யா தமது சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார். ஒன்பதாவது வயதில் பாலமுரளிக்கு வானொலியில் முழுநேரக் கச்சேரி!

தாத்தா ஸ்ரீகண்டையா வயலின் வித்வான். தகப்பனார் பாப்பா வெங்கட்ராமய்யா பிரசித்தி பெற்ற வயலின் வித்வான். தியாகராஜன் ஆறு வயதிலேயே தாத்தாவிடம் வயலின் கற்றுக் கொள்ள ஆரம்பித்தார். பிறகு தகப்பனாரிடமும் கற்றுக் கொண்டார்.

அப்பா கண்டிப்புக்காரர். ''இதை ஒரு கலைநோக்குடனே பொழுதுபோக்குக்காகவோ கற்றுக் கொள். தொழில் நோக்குடன் அணுக வேண்டாம்'' என்றுதான் வற்புறுத்தினார். ஆனாலும் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த பிறகு தியாகராஜன் வயலின் வாசிப்பில்தான் ஈடுபாட்டைக் காண்பித்தார். தகப்பனாரும் 'சரி போகட்டும்' என்று சும்மா இருந்து விட்டார்!

அப்பா ஒன்று நினைக்க...



தியாகராஜனின் அரங்கேற்றம் 1948ம் ஆண்டு திருவையாறு தியாகராஜ உற்சவத்தில் நடந்தது. தகப்பனாருடன் கூடச் சேர்ந்து வயலின் வாசித்தார். மேடை ஏறியது இதுதான் முதல் தடவை.

1967ல் அமெரிக்க வெஸ்லியன் சர்வகலாசாலைக்கு வயலின் பேராசிரியராகப் போய் மூன்று வருடங்கள் பணியாற்றிவிட்டுத் திரும்பி விருக்கிறார். தென்னிந்திய வயலின் இசைக்கு அங்கே பிரமாதமான வரவேற்பு இருக்கிறது என்கிறார் தியாகராஜன்.

அமெரிக்க வாசத்தின் போது, ரமணி, டி. விஸ்வநாதன் போன்றவர்களுடன் சேர்ந்து அங்கேயே பல இசைத்தட்டுக்களைக் கொடுத்திருக்கிறார்.

வேலூர் கோபாலாச்சாரியார் அந்த நாட்களில் ஒரு புகழ் பெற்ற மிருதங்க வித்வான். நைனா பிள்ளையின் சிஷ்யர். மிருதங்கம் தவிர கொன்னக்கோல் வாசிப்பதிலும் நிபுணர். இந்தக் கோபாலாச்சாரியாரின் சிஷ்யன்தான் ராமபத்திரன். குரு சிஷ்ய உறவைத் தவிர அப்பா—பிள்ளை என்ற உறவும் உண்டு. சிறுவன் ராமபத்திரன் எட்டு, ஒன்பது வயதிலேயே மிருதங்கத்தை லாகவமாகக் கையாளப் பழகிக் கொண்டு விட்டான். ஆனால் ராமபத்திரனின் முறையான அரங்கேற்றம் பதினைந்தாம் வயதில்தான் நிகழ்ந்தது. அதுவும் அமர்க்களமாகவே இருந்தது.

18—7—43ல் எழும்பூர் ஜகன்னாத பக்தசபா ஆதரவில் மதுரை மணி ஐயர் கச்சேரி ஏற்பாடாகி யிருந்தது. அன்றைக்கு ராமபத்திரனை உற்சாகப்படுத்தி மேடை ஏற்றி உட்கார வைத்து விட்டார்கள். ராமபத்திரனுக்கு உள்ளூற பயம். ஆனால் வாசிப்பு பிரமாதமாக அமைந்து விட்டது. கச்சேரியை ரசித்த பேராசிரியர் சாம்பமூர்த்தி மனம் திறந்து பாராட்டினார். அடுத்த வாரம் நடக்கவிருந்த அரியக்குடி அய்யங்கார் அவர்கள் கச்சேரிக்கும் ராமபத்திரனையே ஏற்பாடு செய்து விட்டார்கள். சௌடய்யா வயலின். அரங்கேற்ற நேரம் அதிர்ஷ்ட நேரமாகவே மாறியது ராமபத்திரனுக்கு.

அமெரிக்காவில் 1962ல் முதல் தடவையாக மிருதங்கத்தை அறிமுகப்படுத்தும் வாய்ப்பு ராமபத்திரனுக்குக் கிடைத்தது.

உள்ளூற பயம் : வாசிப்பு அபாரம் !





ஆசார்யாள் சதஸ்; அரியக்குடி தம்பூரா!

இவர் வீடே ஒரு சங்கீத மண்டபமாக விளங்கிய காரணத்தால் இவருக்குச் சிறு வயதிலிருந்தே இசைத் துறையில் ஒரு லயிப்பு விழுந்து விட்டது. வழக்கறிஞரான தகப்பனார் சிறந்த சங்கீத ரசிகர். அந்த நாளில் பிரபலமாயிருந்த அத்தனை இசை வித்வான்களும் இவர் தகப்பனாரின் நண்பர்களாக வந்து போய்க் கொண்டிருந்ததால் அவர்களுடைய ஆத்மார்த்தமான சங்கீதத்தைக் கேட்கும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. தாமும் பாடிப் பழக ஆரம்பித்தார்.

1933 அல்லது 1934ம் வருடம். எஸ். ராஜத்துக்கு அப்போது வயது பதின்மூன்று. காஞ்சி ஆசாரிய ஸ்வாமிகள் சித்தூரில் முகாமிட்டிருந்த வேளை. அங்கே சதசில் சில சங்கீத நிகழ்ச்சிகள் ஏற்பாடாகியிருந்தன. முதல் நாள் அரியக்குடி கச்சேரி. மறுநாள் அதே நேரத்தில் ராஜம் பாடுவதற்குத் திடீரென்று ஏற்பாடாகி விட்டது. அன்று ராஜத்தின் கச்சேரிக்குத் தம்புராப் போட்டவர் குடும்ப நண்பர் அரியக்குடியேதான்! சுமார் இரண்டு மணி நேர அவகாசத்துக்குப் பாடி ஜமாய்த்துவிட்டார். இந்த அரங்கேற்றக் கச்சேரிக்குச் சன்மானமாக, மடத்து நிர்வாகிகள் தங்கப் பதக்கமும் பட்டும் கொடுத்தார்கள். பின்னர் ராஜத்துக்கு சாஸ்திரீய சங்கீதத்தை முறைப்படி கற்றுக் கொடுத்தவர் காலஞ்சென்ற வயலின் வித்வான் திருவாலங்காடு சுந்தரேசய்யர். இப்போது சென்னை வானொலியில் பணியாற்றும் ராஜம் சிறந்த ஓவியருங்கூட.

பரம்பரையே சங்கீத பரம்பரை. தகப்பனார் சங்கீத கலாநிதி பொன்னையாபிள்ளை. சிறுவன் சிவானந்தத்துக்குப் பரதநாட்டியம், சங்கீதம், மிருதங்கம் எல்லாவற்றிலுமே ஒருவித மோகம். ஆனால் பொன்னையா பிள்ளை அவர்களுக்குத் தம் புதல்வன் இந்தத் துறையில் நுழைவது கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. தடுத்துப் பார்த்தார். அப்போது அவர் அண்ணாமலை சர்வகலாசாலையில் பணியாற்றி வந்தார். ஆனாலும் சிவானந்தத்துக்கு டி.என். சபேசய்யரின் பொசிக பலமாக இருந்தது. எனவே சிவானந்தம் வீணை கற்கத் தேசமங்கலம் சுப்பிரமணிய ஐயரையும் கோமதி சங்கரய்யரையும் அணுகினார்.

1936ல் கல்யாண சோழபுரத்தில் நடந்த ஒரு கல்யாணத்தில் சிவானந்தத்தின் வீணைக் கச்சேரி அரங்கேற்றமாயிற்று.

பேரசு பிடித்தவர்!



1942ல் கோவையில் ஒரு பெரிய மனிதர் வீட்டுக் கல்யாணக் கச்சேரி. கல்யாணி வர்ணத்துடன் ஆரம்பித்தார். வர்ணம் முடிந்தவுடன் அந்தத் திருமணம் சம்பந்தப்பட்ட பிரமுகர் ஒருவர் மேடையை நெருங்கி வந்து 'நோட்டு வாசியுங்க' என்று கேட்டுக் கொண்டார். சிவானந்தம் திகைத்துவிட்டார். அவருக்கு அந்த வேண்டுகோள் புரியவில்லை. அவருக்கு நோட்டு வாசிக்கத் தெரியாது.

மாமா முத்தையா பிள்ளைதான் அன்று வயலின். அவர் ரகசியமாக ''முழிக்காதே. கோலாட்டப் பாட்டுக்களை வாசி! இங்கிலீஷ் நோட்டு மாதிரி அமையும்'' என்றார். சிவானந்தம் அப்படியே செய்யப் பிரமுகர் ரொம்ப சந்தோஷப்பட்டார். சன்மானத்தோடு கூட ஒரு தங்கமெடலும் கிடைத்தது. என்ன செய்வது, அப்படியும் சில ரசிகர்கள்!

''என்னோடே இந்தத் தம்புராத் தூக்கறது நிற்கட்டும்டா! நீ படித்து ஏதாவது உத்தியோகம் பாருடா!'' என்றுதான் சொல்லிக் கொண்டிருந்தார் தகப்பனார் மகாராஜபுரம் விசுவநாதய்யர். பையன் பள்ளிக்கூட நாட்களில் பாரதிப் பாட்டுப் போட்டிகளிலும், மற்ற இசைப் போட்டிகளிலும் பரிசுகளை வாங்கிக் குவிப்பதைக் கண்டு பெரியவருக்கு உள்ளூறப் பயமே வந்து விட்டது. ஆனாலும் சிறுவன் சந்தானம் அப்பாவின் சங்கீதத்திலேயே லயித்து அவர் பாடுவதைக் கேட்டுக் கேட்டு அந்தத் துறையின் திசையிலேதான் சென்று கொண்டிருந்தான்.

மாயவரத்தில் மதுரை மணி ஐயரின் சகோதரிக்குத் திருமணம். மகாராஜபுரம் விசுவநாதய்யர் கச்சேரி. விசுவநாதய்யருக்குத் தம்புராப் போட்டுக் கொண்டு கூடப் பாடும் ஐயங்கார் ஒருவர் அன்று வரமுடியவில்லை. ஆகவே அவசரத்துக்கு விசுவநாதய்யர் சந்தானத்தைப் பார்த்து, ''சரி சரி! இன்னிக்கு என்கூடப் பாடிடு!'' என்று கூறி வைத்தார்.

கச்சேரி, சந்தானத்துக்கு ஒரு வகையில் நுழைவுப் பரீட்சையாகவும் அமைந்தது. இந்தக் கச்சேரிக்குப் பிறகுதான் மகாராஜபுரம் தம் பிள்ளைக்கு முறையாகச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார்!

நுழைவுப் பரீட்சை தேறினார்!



பரூர் சுந்தரமய்யரின் புதல்வராகிய எம். எஸ். கோபால கிருஷ்ணன் இன்று ஒரு சிறந்த வயலின் வித்வானாக விளங்குவதில் ஆச்சரியமில்லை. புலிக்குப் பிறந்ததாயிற்றே! தகப்பனாரே குரு ஸ்தானத்தை ஏற்றுக்கொண்டார். பள்ளிக் கூடத்துக்கும் ஒழுங்காகப் போக வேண்டும். அதைத் தவிர வீட்டில் கண்டிப்பாக எட்டு மணி நேரம் வயலின் கற்றுக் கொண்டாக வேண்டும்!

கோபாலகிருஷ்ணனின் அரங்கேற்றம் ஒன்பதாவது வயதிலேயே நடந்து விட்டது—கல்கத்தாவில் தகப்பனாருடன் சேர்ந்து வாசித்தார்.

1952ம் ஆண்டு தந்தையுடன் காபூலுக்குக் கச்சேரி செய்யப் போயிருக்கிறார். இந்த ஆண்டில் நேபாள அரசர் அழைப்பின் மேல் காட்மாண்டுவுக்கும் போய்க் கச்சேரி செய்து விட்டுத் திரும்பினார். தந்தையாரின் வயோதிகத் தன்மையை முன்னிட்டு இவர் வெளிநாடுகளுக்குப் போகும் பல வாய்ப்புக்களைத் தவிர்த்து விட்டார்.

சமீப காலமாக ஹிந்துஸ்தானி இசைத் துறையிலும் ஆழ்ந்த கவனம் செலுத்தி வருகிறார்.

ஆறு மணி நேரப் படிப்பு;
எட்டு மணி நேர வாசிப்பு!





குரு அளித்த கௌரவம்

இவருடைய ஆரம்ப கால குருகுலவாசம் காரைக்குடி ஜலதரங்கம் கணபதி ஐயரிடம். பதினோராவது வயதில் 1936ம் ஆண்டில் ஓரளவு அஸ்திவார ஞானத்துடன் அரியக்குடி ராமானுஜய்யங்காரிடம் வந்து சேர்ந்தார் பி. ராஜம் அய்யர். பதின்மூன்றாவது வயதிலேயே சுவாமிமலை சுவாமிநாத சுவாமி சன்னதியில் தம்புராப் போட்டு அரியக்குடியுடன் கூடச் சேர்ந்து பாடும் வாய்ப்புக் கிட்டியது.

இவர் தனியாக உட்கார்ந்து முழுக் கச்சேரி செய்தது 1944ம் ஆண்டு திருவையாறு தியாகராஜ உற்சவத்தில்தான்.

சில வருஷங்களுக்கு முன்னால் பெரம்பூர் சங்கீத சபா நிர்வாகிகள், 'சங்கீத வித்வான்களின் பிரபல சிஷ்யர்கள்' என்ற வரிசையில் பல கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அரியக்குடியின் சிஷ்யன் என்ற முறையில் ராஜம் அய்யரும் ஒரு நாள் பாடினார். அன்று கச்சேரியின் ஆரம்பத்திலிருந்து முடிவுவரை அரியக்குடி வந்து உட்கார்ந்து கச்சேரியை ரசித்தார். இதை ஒரு பெரிய கௌரவமாக ராஜமய்யர் நினைக்கிறார்.

1945—46ல் சில மாதங்கள் திருவனந்தபுரத்தில் தங்கியிருந்தபோது ராஜமய்யர் ஐயப்ப தரிசனத்துக்குச் சபரிமலைக்குப் போயிருந்தார். அங்கே எதிர்பாராத விதமாக சௌடய்யாவும் வந்திருந்தார். இவரைப் பார்த்தவுடன் சௌடய்யாவுக்கு ஒரே உற்சாகம். ''உட்கார்ந்து 'ஹரிஹர புத்திரம்' கீர்த்தனையைப் பாடுங்கள். அதற்கு இங்கே நான் வயலின் வாசிக்க வேண்டும்'' என்று வயலின் பெட்டியைத் திறந்தார்.

தகப்பனார் தஞ்சாவூர் மகாலிங்கம் பிள்ளை ஒரு மிருதங்க வித்வான். தம் மழலைச் செல்வத்துக்குப் பரதநாட்டியம் கற்றுக் கொடுக்கத்தான் அவர் ஆசைப் பட்டார். சிறுவன் தியாகராஜன் அத்தனை வசீகரமாக இருந்தான். ஆனால் அந்தச் சிறுவன் ஐந்தாம் வயதில் பரதநாட்டிய ஆசைக்குப் பிரியாவிடை கொடுத்து விட்டான். காரணம் அந்நாளைய வெள்ளிச் சதங்கை அத்தனை கனம்! ஒன்பது வயது வரை தகப்பனாரிடமே இசை பயின்றான். ஒன்பதாம் வயதில் ஒரு திருப்பம். பதினாறும் வயது வரை தொழில் நாடக உலகம்!

நடனம்,
நாடகம்,
இசை!



மீண்டும் இசைத் துறை அவரைத் தன்பால் இழுத்தது. மிருதங்க வித்வான் தஞ்சாவூர் வைத்தியநாதய்யரிடம் வந்து சேர்ந்தார். இவர் 1941ல் தம் சிஷ்யன் தியாகராஜனைச் செம்மங்குடி சீனிவாசய்யரிடம் ஒப்படைத்தார். 1941லிருந்து 44 வரை செம்மங்குடியின் சிஷ்யராக மலர ஆரம்பித்தார்.

1944-45ல் திருவையாறு தியாகையர் ஆராதனையின் போது நிகழ்ந்த இவருடைய அரங்கேற்றக் கச்சேரியே முதல்தரக் கச்சேரியாக அமைந்தது. இன்று தமிழ்நாடு கர்நாடக இசைக் கல்லூரியின் உதவி முதல்வர்.

தொகுப்பு: கோமதி சுவாமிநாதன்

## நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

# புதிய டெண்டெர் கேர்




### பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர்!

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெரும் பேறு. எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்—டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்—எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

CTC.G.I.TM

Shilpi-BOB-23e/74 Tam



# எங்களிடம் தருவீர் ரூ. 5,000/-

# திரும்பப் பெறுவீர் ரூ. 35,000/-

**31.50% ஐவிட அதிக ஆண்டுவட்டி வீதத்தில்!**

**அதோடு, வரிவிலக்கு வசதியும் உண்டு!**

வியப்பாயில்லை? ஆம்! ரூ. 1,000க்கு மேற்பட்ட எவ்வொரு தொகையையும் எம்மிடம் இட்டுவைப்பீர்... எம்முடைய திட்டங்களில் அவ்விட்டுவைப்பு எப்படி வளர்கிறது என்பதைச் சற்றே பாருங்கள்...7 மடங்கு பெருக்கம் 20 ஆண்டில்!

பட்டியலைப் படித்துப் பாருங்களேன்.

| கால வரையறை | ஆண்டு வட்டிவீதம் (ஏறக்குறைய) |
|---|---|
| 61 மாதங்கள் | 13% |
| 84 மாதங்கள் | 14% |
| 108 மாதங்கள் | 16% |
| 120 மாதங்கள் | 17% |
| 144 மாதங்கள் | 19% |
| 180 மாதங்கள் | 23% |
| 240 மாதங்கள் | 31 50% |

ரூ. 3,000/- வரையான பாங்க் வட்டி வரிவிதிப்பு-விலக்கு பெறுகிறது— அதிக வருவாய் உடையோர்க்கு மிகுந்த பயனளிப்பது.

உங்களுக்கு வேண்டிய விவரங்களைப் பெற அருகாமையிலுள்ள எமது ஏதேனுமொரு கிளையை நாடுவீர்!



நீங்கள் என்றென்றும் வளமையுடன் வாழ—

## பாங்க் ஆஃப் பரோடா

(நாட்டுடைமையாக்கப்பட்ட முக்கிய பாங்க்)

இந்தியாவிலும், வெளிநாடுகளில்—யு.கே., கென்யா, மொரீசியஸ், ஃபிஜித்தீவுகள், உகாண்டா மற்றும் யுனைடெட் அரபு எமிரேட்டிலும் 800க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.

# திரை கடல் ஓடி...

"ராம நவமிக்கு முப்பது கச்சேரிகள் ஏற்பாடு செய்திருக்கிறோம். உங்கள் கச்சேரியை ராமநவமி அன்றைக்கே விமரிசையாக நடத்தணும்னு எல்லோர் அபிப்பிராயமும். கோரிக்கையை ஏத்துக்கணும்" என்று கேட்டுக் கொண்டார் காரியதரிசி.

"ராமநவமி அன்றைக்கா? பேஷ், பேஷ்... ராமநவமி அன்று ராம கைங்கரியம் செய்யக் கொடுத்து வைக்கணுமே!" என்றார் பாகவதர்.

"பாகவதர்வாள்! அடுத்த மாதம் உங்களால் அமெரிக்கப் பிரயாணம் செய்ய முடியுமோ? இவர் உங்கள் 'டேப்'பை என் வீட்டில் கேட்டு விட்டு உங்களை அமெரிக்காவுக்கு அழைத்துப் போய், எல்லா நகரங்களிலும் உங்கள் கச்சேரிகளை ஏற்பாடு செய்யணும்னு துடிக்கிறார்" என்று அன்று ஓர் ஆங்கிலேயரை அறிமுகப்படுத்தி வைத்துக் கேட்டார் இன்னொரு நண்பர். "பண விஷயம் எப்படியோ?" என்று கேட்டார் பாகவதர்.

"அதைப் பற்றி உமக்கு ஏன் கவலை? மூன்று மாதங்களில் இந்த ஊரில் மூன்று தலைமுறைகளில் சம்பாதிக்கக் கூடிய பணத்தைத் திரட்டிக் கொள்ளலாம்."

ராமநவமி உற்சவ மண்டபத்தில் ராம நாமாவளியின் ஒலி ஆகாயத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

-"இன்று நாகநாத பாகவதர் பாடியிருக்கணும். அமெரிக்கா போய் விட்டார். எங்களுக்குப் பெரும் ஏமாற்றம்தான்" என்று காரியதரிசி சிவநேசனிடம் குறைப்பட்டுக் கொண்டார்.

"இதிலே என்ன குறை ஐயா! நம்ம ஊரிலே ராமநவமி எங்கே போகிறது? இந்த வருஷம் இல்லேன்னு அடுத்த வருஷம். இங்கு பாடினால் இன்றைக்கெல்லாம் இருந்தால் ஒரு மாலை போட்டுத் தேங்காய் மூடி ஒன்று கொடுப்பீர்கள். இப்ப அவர் ஏகமாய்ச் சம்பாஇக்கிறார். எங்கே போனாலும் புகழ்ச்சியாம். டெலிவிஷன் கச்சேரிகளாம். டேப்பாம். ஒரு மாதம் மேலே தங்கியிருந்தால் பத்து, இருபதினாயிரம் ரூபாய் மேலும் லாபமாம்... யாரைய்யா இந்த நாளில் கொடுக்கிறார்கள்?" என்றார் சிவநேசன்.

நாகநாத பாகவதருக்குப் பதில் அன்று பாடிய பாகவதரின் பாட்டு ஒலிபெருக்கியில் கேட்டது.

ராகம்—கல்யாணி தாளம்—சாபு

நிதி சால சுகமா...ராமுனி ஸந்
நிதி ஸேவ சுகமா — நிஜமுக பல்கு மனஸா

ததி நவநீத க்ஷீரமுலு ருசோ—தாச—
ரதி த்யான பஜன ஸுதாரஸமு ருசோ

தம சம மனு கங்கா ஸ்நானமு சுகமா கர்—
தம துர்விஷய கூப ஸ்நானமு சுகமா
மமத பந்தனயுத நரஸ்துதி சுகமா
ஸுமதி தியாகராஜனுதுனி கீர்த்தன சுகமா

[நிதி சுகமா? ராம ஸன்னிதியில் ஸேவை சுகமா? தயிர், வெண்ணெய், பால் சுவை சுகமா? ராம த்யான பஜனை சுகமா? கங்கா ஸ்நானம் சுகமா? சேறு நிறைந்த கிணறு ஸ்நானம் சுகமா? நரஸ்துதி சுகமா? தியாகராஜன் பாடும் ராமன் துதி சுகமா?]



கீர்த்தனாக் கதை-3

# இப்ப முடியுமா?

அந்தப் பிரபல்யமான துணிக் கடையில் ஜே ஜே என்று கும்பல். கல்யாண காலம். அப்படி இப்படி நகரக்கூட இடமில்லாமல் பெண்கள், வயதான தாய்மார்கள், பாட்டிகள் புடவைகளைப் பொறுக்கி எடுப்பதில் முனைந்திருந்தார்கள். அந்த வயதான அம்மாள், ஒரு விலையுயர்ந்த சேலையைக் கையில் எடுத்துக் கொண்டு திரும்பினாள். அந்தக் கடையில் சேலை பொறுக்கும் வேலை ஒரு ஐந்து நிமிடம் ஸ்தம்பித்துப் போயிற்று. காரணம் சினிமா நட்சத்திரங்களில் முன்னணியில் இருக்கும் மாதுரி கடையினுள் நுழைந்ததுதான். அவள் பக்கத்தில் கிருதாவும், நவநாகரிக உடையும் அணிந்திருந்தவன் பெருமையில் அவளை அணுகியபடியே வந்து கொண்டிருந்தான். மாதுரி கொச்சை கொச்சையாய், நவநாகரிக கான்வென்டு பிள்ளைகள் பாணியில் அவனைப் பார்த்துப் பேசியபோதெல்லாம் அவன் முகத்தில் அலாதி பெருமிதம் படர்ந்தது. அவனும் அவளுடன் கொஞ்சிக் கொஞ்சிப் பேசினான்.

கையில் சேலையுடன் வந்த அந்த வயதான அம்மாள் கிருதாவுடன் வந்த ஆளை உற்றுக் கவனித்தாள்.

''ஏண்டா, ரகு! இவன் நம்ம ராமாயண சாஸ்திரி பேரன் இல்லே? அவன் ஜாடையாய் இருக்கே!'' என்று கடைக்கு அவளுடன் வந்திருந்த அவள் பிள்ளையைக் காதுடன் காதாய்க் கேட்டாள்., ரகு அவனை உற்று நோக்கினான்.

''அவன் மாதிரிதான் இருக்கு. என்னோடு கும்பகோணம் ஸ்கூலில் படித்தவன்தான்... ஆனால் இப்ப ரொம்பவும் பருத்துக் கிடக்கிறான். ஆமாம்மா, அவனேதான். கழுத்திலே வடு இருக்கே. அவனேதான். சந்தேகமில்லே'' என்று ரகு அவனுக்குத் தெரிந்த பால்ய அடையாளத்தை வைத்துக்கொண்டு மாதுரியுடன் வந்தவன் ராமாயண சாஸ்திரியின் பேரன் வைத்தி என்று நிர்ணயித்தான்.

''ஏதோ ஒரு தளுக்கி குலுக்கி பெண்ணுடன் வருகிறானே. அவன் கல்யாணத்துக்குக்கூட நமக்கு அழைப்பு வந்து நாம் போகலே? அந்தப் பொண்ணு இப்படி யெல்லாம் பகல் வேஷம் மாதிரி வந்திருக்கு'' என்று ரகுவின் தாயார் கேட்டாள். இவர்கள் பேச்சு பக்கத்தில் இருந்தவர்களின் கவனத்தை ஈர்த்தது.

''அம்மா! கொஞ்சம் பேசாம இரும்மா. வீட்டுக்கு வந்து சொல்றேன்.'' ரகு பொது இடத்தில் இப்படி யெல்லாம் பேசுவது நாகரிகமில்லை என்று அம்மாவுக்குப் போதித்தான்.

அம்மாவும் வேறொரு மூலைக்கு ஜாக்கெட் பொறுக்கப் போனாள். அரை மணிக்கப்புறம்தான் சிப்பந்திகளுக்குக் கடையில் வந்தவர்களைக் கவனிக்க அவகாசம் கிடைத்தது.

மாதுரி சொகுசாகக் கடையை விட்டு வெளியேறினாள். சுருண்டு சுருண்ட கேசங்கள். ஓரிரண்டு சுருள்கள் பௌடர் அப்பிய முகமேனியில் தவழ்ந்து விளையாடின. உடல் வளைவு நெளிவுகள் தெரிய மெல்லிய ஆடை வழுக்கி வழுக்கி விழும்படியாகக் கட்டப்பட்டிருந்தது. போதையூட்டும் மது போன்ற உடற் கவர்ச்சி. அவள் இடுப்பில் லாகவமாகக் கைகொடுத்து வைத்தி அவளைக் காரினுள் உட்கார வைத்துத் தானும் பக்கத்தில் சொகுசாய் அமர்ந்தான். கடை முதலாளி வாசல் வரையிலும் வந்து வழியனுப்பினான். சேலைப் பாக்கெட்டுக்கள் காரின் முன் ஆசனத்தில் வைக்கப்பட்டன.

''என்ன பில்?'' என்று காரினுள்ளிருந்தே வைத்தி கேட்டான்.

''ஆறாயிரத்து ஐந்நூறு ஸார்'' என்றான் முதலாளி. தோல் பையிலிருந்து செக் புத்தகத்தை எடுத்து அந்தத் தொகைக்கு செக் எழுதிக் கொடுத்து முதலாளியின் நன்றியைப் பெற்றுக் கொண்டு காரைக் கிளப்பச் சொன்னான்.

''ஷோனுலால் வைர வியாபாரி கடைக்குப் போ!'' என்று டிரைவருக்குச் சொன்னான்.

''அம்மா, அன்று கேட்டாயே இதோ பார்!'' என்று ரகு அம்மாவிடம் ஒரு பிரபல சினிமாப் பத்திரிகையைக் காண்பித்தான். மேல் அட்டைப் படம் தொடங்கி உள்ளே ஐந்தாறு கலர்ப் பக்கங்கள் வரை மாதுரியின் கவர்ச்சித் தோற்றமே பல கோணங்களில் பிரசுரமாகியிருந்தது. ''ஹாப்பி பர்த்டே டு யூ'' என்ற தலைப்பு.

''இதுக்குத்தான் அந்த வைத்தி அசடு மாதிரி அவள் புடவைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டு வந்திருந்தானா? அதுக்கு ஏன் தான் இப்படிப் புத்தி கெட்டுப் போய்விட்டதோ? ராமாயண சாஸ்திரிகள் இருந்த நேமம், நிஷ்டை, படிப்பு, ஆசாரம் என்ன? அவருக்கு இப்படிச் சினிமாக்காரியைச் சுத்தற பேரனா? கலிகாலம் என்கிறது சரியாத்தான் இருக்கு. பெரியவா கௌரதை, பண்பு ஒண்ணும் கிடையாதா?'' என்று ராமாயண சாஸ்திரிகள் வாழ்க்கையை நினைத்து ரகுவின் தாயார் வைத்தியை மனமாரச் சபித்தாள்.

''நீ ஏன் அம்மா இப்படி அங்கலாய்க்கறே? வைத்தி அப்பா, அம்மாகூட இப்படிக் கஷ்டப்பட்டுக்க மாட்டா போயிருக்கே?'' என்று ரகு தாயாருக்கு உபதேசம் செய்தான்.

''நமக்கு ரொம்பத் தெரிந்தவா பிள்ளை இப்படிக் கெட்டுப் போகிறான் என்றால் மனம் கேட்க மாட்டேன் என்கிறது டா. வைத்தி



வேறு நீ வேறு? உன்னுடன் பள்ளிக்கூடத்திலேருந்து வந்து நம்ப ஆத்திலே எவ்வளவு நாட்கள் இட்லி, மிளகாய்ப் பொடி போட்டுண்டு சாப்பிட்டிருப்பான். அந்த வாஞ்சைடா! நேரில் போய்ப் புத்திமதி சொல்லலாமோ என்றுகூடத் துடிக்கிறது'' என்று மாதுரி சினிமாப் பத்திரிகையைத் தூக்கி எறிந்தான்.

''உன் பேச்சு ஒன்றும் அவன் காதிலே ஏறாது. மாதுரி பேச்சுத்தான் அவனுக்கு அவன் தாத்தாவின் ராமாயண உபன்யாசம். அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போகிறான், தெரியுமோல்லியோ!'' என்றான் ரகு.

''அதுதான் அன்னிக்கே கடையிலே எல்லாரும் பேசிக் கொண்டார்களே. இதுகளுக்கெல்லாம் யார் யார் எவன் எவளைக் கல்யாணம் பண்ணிக்கறா, எவள் எவனை விட்டு ஓடிவிட்டாள் இதைப் பத்தி யெல்லாம் என்ன அக்கறை?'' என்றாள் ரகுவின் தாயார்.

அடுத்த மாதம், ''அம்மா, கேட்டியா? வைத்தி வீடு ஏலத்துக்கு வந்திருக்கு! அந்த மாதுரி இவன் பணத்தை உறிஞ்சிட்டு வேறு ஒருத்தனைப் பிடித்துக் கொண்டு விட்டாள்'' என்று அந்தப் புதுமுக ஆசாமி யார் என்று போட்டிருந்த சினிமாப் பத்திரிகையை அம்மாவுக்குக் காட்டினான் ரகு.

''பணம் போனால் போகட்டும். புத்தி வந்தால் சரிதான்'' என்று தாயார் சொன்னாள்.

வைத்தி ஏலத்துக்கு வந்திருந்த வீட்டில் சோகத்துடன் உட்கார்ந்திருந்தான். மாதுரி செய்த வஞ்சகத்தை மறக்கப் பிரயத்தனப் படப் பட ஆவேசம் கொந்தளித்தது. ''நான் முட்டாள். கபடம் கள்ளும் அவள் மேலாடையிலும், இளமையின் மதமதப்பிலும், செயற்கை முடி அழகிலும் மயங்கிப் போனேன். அவளைக் குற்றம் கூறுவானேன்? எனக்குப் புத்தி எங்கே போயிற்று? மனசு திடமாய் இல்லை'' என்று அந்தராத்மாவைக் கலந்து ஆலோசித்து அமைதியை நாடினான். பக்கத்து வீட்டில் ரேடியோ அலறிற்று. தாத்தாவின் ஒலிப் பதிவு ராமாயண உபந்யாசம் நடத்துகொண்டிருந்தது. தியாகராஜுஸ்வாமியின் கீர்த்தனை ஒன்றை அழகாகப் பாடிக் கொண்டிருந்தார். தாத்தாவின் குரல் கேட்டு ஓர் அமைதி. பாட்டைக் கவனமாய்க் கேட்டான்.

ராகம் தோடி — தாளம் ரூபகம்

பல்லவி

தப்பி ப்ரதிகி போவ தரமா? ராமா! கலிலோ

அனுபல்லவி

ரூப்புந விஷயதடாகமுந முநுகக
திருட மனஸை

சரணம்

கஞ்சு மொதலு லோஹ தந
கநகமுலநு ஜூசி விஸ —
மஞ்சு மதிவு பெங்குலநுக
தெஞ்சி யண்டநி மனஸை—
நங்கநாகல மாநநுயங்க
வஸ்த்ரமுல பாகநு
மூங்குருலநு கநி யந்த்ரங்கமுநநு
ஆன்ஞ்சக
ஜாஜிமல்லெ மந்தார
ஸரோஜமுலநு மனஸார
ராஜ பந்நுமே த்யாகராஜநுதுனி
பூஜிஞ்சக.

[இக்கலியில் சிற்றின்பத்தில் மூழ்காமல் திடமான மனத்துடன் தப்பிப் பிழைப்பது முடியுமா? செல்வம், பொன் இவைகள் பானை ஓடுகளுக்குச் சமம் என்று உணர்வதும், கபடம் நிறைந்த பெண்கள் கவர்ச்சியில் விழாமல் தப்பிப் பிழைப்பதும் சாத்தியமா? தியாகராஜன் பூஜிக்கும் ராம பக்தியைத் தவிர வேறு விதமாகக் கலியில் தப்பிப் பிழைக்க முடியுமா?]







# நினைவுகள்







## டைகரின் குல்லாய்

டைகர் வரதாசாரியார் பிறரைப் பரிகசிப்பதில்லை. தம்முடைய நகைச்சுவைக்குத் தம்மையே இலக்காக்கிக் கொண்டு மற்றவர்களைச் சிரிக்க வைப்பார். நிலைக் கண்ணாடியின் முன்பு நின்று கொண்டு, தம் அழகைத் தாமே ரசித்து, ''என் பெயர்தான் டைகர். ஆனால் உருவத்தில் நான் கரடி'' என்பார்!

ஒரு முறை மைசூரில் அவர் பெரிய குல்லாய் ஒன்றைத் தலை மீது அணிந்து உலாவ ஆரம்பித்தார். பிரம்மாண்டமான அவருடைய சரீரத்தின் சிரத்தின் மீது அந்தக் குல்லாய் சிறிதும் பொருந்தாமல், அவரை ஒரு கோமாளியாகவே தோன்றச் செய்தது. நண்பர்கள் எவ்வளவு வற்புறுத்தியும் அவர் அதைக் கழற்ற மறுத்துவிட்டார். ''பிரம்ம தேவனே என்னை இவ்வாறு சிருஷ்டி செய்திருக்கையில் இந்தக் குல்லாய் பாவம், என்ன செய்யும்? தேவேந்திரனுடைய மணிமுடியை எடுத்து என் தலை மேல் வைத்தாலும் இப்படித்தான் இருக்கும்'' என்று கூறிவிட்டார்.

ஒரு நாள் மாலை வாசுதேவாச்சாரியாரின் நண்பர்கள் சிலர் ஒன்றுகூடி அவரை மத்யம கால தானம் பாடுமாறு கேட்டுக் கொண்டனர். அவர் காம்போதி ராகத்தைப் பாட ஆரம்பிக்கும் சமயத்துக்குச் சரியாக டைகர் அங்கு குல்லாய் சகிதமாக ஆஜரானார். இருவருக்கும் குருவான பட்டணம் சுப்பிரமணிய அய்யர் பாணியில் ஆசாரியர் ஆனந்தமாகப் பாடவும், டைகர் மகிழ்ச்சி அடைந்து ''அண்ணா! உமது சங்கீதத்துக்கு என்ன பரிசு கொடுத்தாலும் தகும்'' என்றார். ''அப்படியானால் அந்தக் குல்லாயைக் கழற்றிக் கொடுத்துவிடுங்கள்'' என்றார் வாசுதேவாச்சாரியார். ''கடைசியில் உம்மிடம் தோற்றேனே!'' என்று டைகர் குல்லாயைக் கழற்றி அளித்துவிட்டார்.

## ''பூச்சி'' காட்டிய பரிவு

ஒருமுறை பூச்சி ஐயங்கார் தமது சிஷ்யர்களுடன் அமர்ந்து சாதகம் செய்து கொண்டிருந்தார். அன்று அவர் பாடியது பட்டணம் சுப்பிரமணிய ஐயர் பேகட ராகத்தில் இயற்றியிருந்த ''மாசிட்டுவண்டேமி'' என்ற அடதாள வர்ணம். மூன்று காலங்களிலும் சிரமமாகச் சாதகம் நடந்து முடிந்த சமயம் அவர் தம்புராப் போட்ட துரைசாமியைக் குறிப்பாக நோக்கவும், அவர் எழுந்து சென்று ஒரு வெள்ளித் தட்டில் புகையப் புகைய இட்டிலிகளையும், வெள்ளிப் பேலாவில் நெய்யையும் கொண்டுவந்து குருவின் முன்பு வைத்தார். தாராளமாக நெய்யை வார்த்துக்கொண்டு சுமார் இருபத்தைந்து இட்டிலிகளைப் பூச்சி ஐயங்கார் 'பலகாரம்' செய்ததாக வாசுதேவாச்சாரியார் நகைச்சுவையுடன் குறிப்பிடுகிறார். அதைத் தொடர்ந்து ஒரு வெள்ளிக் கூஜா நிறையக் காப்பியும் பருகப்பட்டது. ''இந்த அசுர சாதகத்துக்கு இந்த ராட்சஸ ஆகாரம் தேவைபோலும்'' என்று ஆசாரியார் தம்மைத் தாமே சமாதானம் செய்து கொண்டாராம்.

பின்னர் சிஷ்யர்களின் சாதகம் ஆரம்பமாயிற்று. அவர்களை ஒவ்வொருவராக வாசுதேவாச்சாரியார் கவனித்துக் கொண்டு வரவும், ஒரு மூலையில் அமர்ந்து பாடிக் கொண்டிருந்த ஓர் இளைஞரின் சாரீரமும், ஞானமும் அவரைக் கவர்ந்தன. இதை அவர் பூச்சி ஐயங்காரிடம் பிரஸ்தாபித்த

# மலர்கின்றன











பொழுது அவர் ''அவனு? அவன் வெறும் மக்கு. ஊக்கம் போதாது'' என்று அசட்டையாகக் கூறினாராம். ''இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது'' என்று வாஸுதேவாச்சாரியார் பிறகு விசாரித்ததில் அந்த சிஷ்யர் குருவுக்கு மிகவும் பிரியமான அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் என்றும், அவருக்குக் கர்வம் ஏற்பட்டு விடக் கூடாது என்று பூச்சி ஐயங்கார் இப்படிப் பேசுவது வழக்கம் என்றும் தெரிய வந்தது!

### பாகவதரே நிறுத்தும்!

சேலத்தில் ஒரு கச்சேரி. ஜி.என்.பி. அற்புதமாக ஆனந்த பைரவி ஆலாபனை செய்து கொண்டிருந்தார். ரசிகர்கள் பகுதியிலிருந்து ஒருவர் சட்டென்று எழுந்து, ''ஓய், பாகவதரே நிறுத்தும்! நிறுத்தும்!'' என்று கூவிக் கொண்டே மேடையை நோக்கி வேகமாக வந்தார். ஜி. என்.பிக்கு வெலவெலத்துப் போய்விட்டது. ''ஓய் பாகவதரே! இந்தச் சொம்பில் உள்ள பாலைக் குடித்துவிட்டு மேலே பாடும்! என்ன ஒன்னும் ஜோஸ் சாரீரம்'' என்று பாராட்டிய அந்த ரசிகர் தம் கையில் இருந்த பால் செம்பினை ஜி.என்.பி.யிடம் நீட்டினார்.

### சோபித்தது!

''ஓர் ஏழைத் தகப்பனார் ரொம்பச் சிரமப்பட்டுத் தம் பெண்ணைக் கன்னிகாதானம் செய்து கொடுத்து அனுப்புகிறார். பிறகு தன் பெண் போன இடத்தில் எப்படிச் சிரமப்படுகிறாளோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்போது சர்வாபரண பூஷிதையாக, முகத்தில் மகிழ்ச்சி பொங்க அந்தப் பெண் தன் ஏழை அப்பா முன் வந்து நிற்கிறாள்.

''அந்தத் தகப்பனார் அப்போது எப்படிச் சந்தோஷப்படுவாரோ அந்த நிலைமையில் இப்போது நான் இருக்கிறேன். என் 'புரோ சேவாரெவருரா' இந்த மகாராஜபுரத்தினும் அப்படிச் சோபித்து விட்டது'' என்று கூறி மகிழ்ந்தார் வாசுதேவாச்சாரியார், ஒருமுறை.

### செப்பழும் காட்டிய சீற்றம்

சம்ஸ்கிருத பண்டிதர் ஆவதற்காக இளம் வயதிலிருந்தே வடமொழியைப் பயில நேர்ந்த போதிலும், வாசுதேவாச்சாரியாரின் மனம் இசைக் கலையையே நாடி நின்றது. எப்படியோ மைசூர் மகாராஜாவிடமிருந்து ஒரு சிபாரிசுக் கடிதத்தைச் சம்பாதித்துக் கொண்டு, பட்டணம் சுப்பிரமணிய அய்யரிடம் குருகுல வாசம் செய்யும் நோக்கத்துடன் திருவையாற்றுக்குப் பயணமானார். அவ்வூருக்குப் புதிதானவரால் தமது அரைகுறைத் தமிழில் விசாரித்துக் கொண்டு ஒரு வீட்டின் கதவைத் தட்டினார். கதவு திறந்ததும் செப்பழமான ஓர் உருவம் காட்சி அளித்தது. ''என்ன? யார் நீ?'' என்று வினவினார். ''இது பட்டணம் சுப்பிரமணிய அய்யர் வீடு.....'' என்று ஆசாரியர் ஆரம்பித்தவுடனேயே அம்மனிதரின் புன்னகை மறைந்தது. கண்கள் சிவந்தன. மறுமொழி ஏதும் கூறாமல் படாரென்று கதவை மூடித் தாளிட்டுக் கொண்டார்.

அதிர்ச்சியும் ஏமாற்றமும் அடைந்த ஆசாரியர் பின்னர் சுப்பிரமணிய அய்யரின் சரியான விலாசத்

---

படங்கள்—இடமிருந்து வலமாக: மேடைக், ஜி.என்.பி. வாசுதேவாச்சாரியார், மகாராஜபுரம், தியாகையர், பிட்டப்பா, அரியக்குடி.

யைத் தேடி அவரிடம் சிஷ்யராக அமர்ந்தார். சில மாதங்களுக்குப் பிறகு பஞ்சநதீசுவரர் ஆலயத்தில் மகா வைத்தியநாத அய்யரின் கச்சேரியைக் கேட்கச் சென்ற ஆசாரியர் கதவை அறைந்து சாத்திய மனிதர் அவரே என்று அறிந்து பேராச்சரியம் அடைந்தார். இதைத் தமது குருவினிடம் பிரஸ்தாபிக்கவும், பட்டணம் சுப்பிரமணிய அய்யர், ''மகா வைத்தியநாதய்யரின் தமையனாரான ராமஸ்வாமி சிவன் எழுதிய 'விஜய சங்கிரகம்' என்ற நூலில் எனது சங்கீதத்தைப் பற்றி இழிவாக எழுதியிருந்ததால் நான், ''விஜயசங்கிரக கண்டனம்'' என்ற பதிலை எழுதி வெளியிட்டேன். அதற்கு அவர், 'விஜய சங்கிரக கண்டன தண்டனம்' என்ற மறுப்பை எழுதினார். அது முதல் எங்களுக்கு இடையே சிறிது மனக் கசப்பு ஏற்பட்டது'' என்று விளக்கம் தந்தார்!

## ''கிருஷ்ணார்ப்பணம்''

சென்ற தலைமுறையில் மைசூரில் பிரசித்தி பெற்று விளங்கிய வீணை சேஷண்ணாவும், சுப்பண்ணாவும் ஒரே பரம்பரையைச் சேர்ந்தவர்களாக இருந்தும், அவர்களின் பொருளாதார நிலையில் பெரிய ஏற்றத் தாழ்வு இருந்து வந்தது. சேஷண்ணா தோளின் மீது வீணையைச் சுமந்து கொண்டு, பச்சை மாவிலைத் தோரணம் கட்டியிருக்க வீடுகளில் தாமாகவே நுழைந்து, வீணை வாசித்து, அவர்களாக உவந்து கொடுத்ததைப் பெற்றுக்கொண்டு போவதுண்டு. சில சமயங்களில் ஐந்து ரூபாய்க்காக ஐந்து மணி நேரம் கச்சேரியும் செய்ததுண்டு.

சுப்பண்ணாவோ பிறந்தது முதல் திருமகளின் கடாட்சம் பெற்றவர். உல்லாச புருஷர். சதா வாசனை பூசிய உடைகளை அணிந்து கொண்டும், ஜேபியில் மல்லிகைச் சரங்களை வைத்துக் கொண்டும் காலம் கழித்தவர். கச்சேரி செய்து பிழைக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தமில்லாததால் அவருடைய வினிகைகளைப் பலர் கேட்டு இன்புற வாய்ப்பில்லாமல் போய்விட்டது. ஆயினும் அவரது வீணைப் பயிற்சி மாத்திரம் மிகக் கடுமையானது. அவருடைய வீட்டில் கண்ணாடி போட்டு மாட்டியிருந்த ஒரு ஜாபிதாவின்படி அவர் தினந்தோறும் மூன்று வேளை ஆறு வர்ணங்கள், இருபத்தைந்து கீர்த்தனைகள், ஐந்து கன ராகங்கள், இரண்டு பல்லவிகள் ஆகியவற்றைச் சாதகம் செய்வது வழக்கம்!

சுப்பண்ணாவின் உதார குணம் மிகப் பிரசித்தமானது. செல்வத்தை யெல்லாம் வாரி வழங்கி விட்டதால் வாழ்க்கையின் பிற்பகுதியில் அவருக்குப் பற்றுக்குறை ஏற்பட்டது. தம்முடைய நண்பர் ஒருவரின் மகள் திருமணத்துக்காகப் பொருளுதவி செய்வதாகச் சுப்பண்ணா வாக்களித்திருந்தார். அந்த மனிதர் வெகு பிரயாசையின் பேரில் வரன் தேடி முகூர்த்தம் வைத்த சமயம் சுப்பண்ணாவின் கஜானா வறண்டிருந்தது. சுப்பண்ணா தம்முடைய மனைவியை அழைத்து, அந்த அம்மாள் அணிந்திருந்த ஒரே ஆபரணமாகிய தங்க ஒட்டியாணத்தைக் கழற்றச் செய்து ''கிருஷ்ணார்ப்பணம்'' என்று கூறி நண்பரிடம் வழங்கினாராம்!

## தியாகையரும் கிருஷ்ணய்யரும்

தமிழ் நாட்டில் 'கனம்' என்ற இசை முறையை முதன் முதலாகப் பயின்று, அரங்கேற்றம் செய்து புகழ்பெற்ற கனம் கிருஷ்ணய்யர் நீண்ட காலம் உடையார்பாளையம் ஜமீன்தாரிடம் ஆஸ்தான வித்வானாக இருந்தவர். நூற்றுக்கணக்கான தமிழ்ப் பதங்களைப் பாடி இசை உலகுக்கு வழங்கியவர்.

இவர் ஒரு முறை திருவையாறு சென்று தியாகையரைக் கண்டு நமஸ்கரிக்கவும், அந்த மகானும் கிருஷ்ணய்யரை அன்புடன் வரவேற்று உபசரித்தார். அச்சமயம் தியாகையரின் சிஷ்யர்களான காமரஸவல்லி நாராயணையரும், தில்லை ஸ்தானம் (திருநெய்த்தானம்) ராமய்யங்காரும் ஸ்வாமிகளால் அடாணா ராகத்தில் இயற்றப் பெற்ற ''ஏ பாபமு'' என்ற கீர்த்தனையைப் பாடினர். பின்னர் தியாகையர் கிருஷ்ணய்யரை நோக்கி, ''நீங்கள் ஏதாவது பாட வேண்டும்'' என்றார். அடாணா ராகத்தைப் பாடுவதில் விசேஷத் திறமை பெற்றிருந்த கிருஷ்ணய்யர் அந்த ராகத்தை விஸ்தாரமாக ஆலாபனை செய்து, புதிதாக ''சும்மா சும்மா வருமா சுகம்'' என்ற பல்லவியை இயற்றிப் பாடினார். கன ஜாதியின் கம்பீரத்துடன் அவர் நூற்றுக்கணக்கான சங்கதிகளையும், கற்பனை ஸ்வரங்களையும் பொழிந்ததைக் கேட்டுத் தியாகையரே விம்மிதமடைந்து கிருஷ்ணய்யரை மனப்பூர்வமாக ஆசிர்வதித்தார். பின்னர் கிருஷ்ணய்யர் அதே பல்லவிக்கு இணங்க அநுபல்லவியையும் சரணங்களையும் இயற்றி நாகப்பட்டினம் ஸ்ரீ சௌந்தரராஜப் பெருமாள் விஷயமாக ஒரு கீர்த்தனத்தைப் பாடி முடித்தார்.

## மந்திரமும் ஜபமும்

தம்புரா ஸ்ருதி அமைக்க உதவும் பகுதிக்கு மந்திரம் என்று பெயர் உண்டு. சென்னை கோகலே ஹாலில் ஒரு நாள் கச்சேரி. சிஷ்யன் தம்புராவில் சுருதி சேர்த்துப் பார்க்கிறான். சரியாக வரவில்லை. ''ஏய்! மந்திரம் சரியாக இருந்தால்தான் நம்ப ஜபம் இங்கே பலிக்கும். பார்த்து வை!'' என்று ஒரு போடு போட்டார் அரியக்குடி.

## கேட்ட குரல் கேளாத செய்தி

ஆறாவது வயதிலேயே சங்கரதாஸ் ஸ்வாமிகளின் நாடகக் குழுவில் பால பார்ட் ஏற்க ஆரம்பித்தார் திரு எஸ். ஜி. கிட்டப்பா. ஒரு சந்தர்ப்பத்தில் நல்லதங்காளில் குழந்தையாகப் பாகமேற்று நடித்த கிட்டப்பா தாம் பாட வேண்டியதையும் பாடி, நல்லதங்காள் பாட வேண்டியதையும் பாடிவிட்டார்! சபையோர் இந்தக் குழந்தைத்தனத்தைக் கண்டு வயிறு குலுங்க நகைத்ததோடு பாட்டுக்கு பேஷ் போடவும் செய்தனர்!

• • •

தேசபக்தர் கிட்டப்பாவின் திருமணத்தின் பொழுது மணப் பந்தலில், திலகர் ஸ்வராஜ்ய நிதிக்கும் சம்பாவனை செய்யப்பட்டது.

• • •

திரு முத்தையா பாகவதர் குரலில் 'தெலியலேரு' என்ற பாடலை ஹட்சின் நிறுவனம் இசைத்தட்டாகப் பதிந்தது. இதை அறியாத கிட்டப்பா அதே பாடலை கொலம்பியாவில் இசைத்தட்டாகத் தந்துவிட்டார். இதனை அறிய நேர்ந்த முத்தையா பாகவதர் கிட்டப்பாவின் இசைத்தட்டைக் கேட்டுவிட்டுத் தம்முடையதை வெளியிட வேண்டாம் என்று கூறிவிட்டார். கிட்டப்பாவின் பாட்டு அவ்வளவு பிரமாதமாக இருந்ததாம்!

தொகுத்தளித்தவர்கள்: டி. எஸ். பி., பட்டினத்தார், குயிலி.



## சோர்வா?
## பலவீனமா?

சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்—
# விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும்
# அடங்கிய பரிபூரண டானிக்

சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சம-சீராக இணைந்துள்ளன—

**தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.**




விட்டமின்கள் நிரம்பியது

## வாட்டர்பரீஸ்
# விட்டமின் டானிக்

## சுறுசுறுப்பான ஆரோக்கியத்திற்கு
## பரிபூரணமான டானிக்

Grant 9 TM

இதோ லக்ஸ் ஸுப்ரீமில் காணுவீர்!

# நீங்கள் பெற விரும்பும் அழகு

"லக்ஸ் ஸுப்ரீம், பெண்கள், சோப்பில் எதிர் பார்க்கும் சகல நற்குணங்களும் உள்ளடங்கியது. செழுமையான, க்ரீம் இணைந்த நுரை—ஆம், அதிலுள்ள ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தை நீங்கள் உண்மையிலேயே உணருவீர்கள். ஒவ்வொரு முறை நான் ஸ்நானம் செய்யும்போதும் எனது மேனி ஜொலிக்கிறது. அதன் நறுமணமோ, மென்மையானது, மிக நேர்த்தியானது".




இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

**லக்ஸ் ஸுப்ரீம்**

# அவர்களுக்குத் தெரியுமா?

"கோகிலா! புஷ்பங்களைப் பறித்து பூஜை அறையில் வை!"

"என்ன இன்றைக்கு என்றுமில்லாத பக்திப் பிரவாகம்?"

"ஆறு மணிக்கு பம்பாயிலே பிருந்து பத்திரிகை நிருபர் என்னைப் பேட்டி காண வரப் போகிறார். என்னைப் பார்த்துவிட்டு ஏழு மணிக்கெல்லாம் அவர் வேறு ஜோலி வைத்துக்கொண்டிருக்கிறார். சீக்கிரம்!"

கோகிலாம்பாள் மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள். கொஞ்ச நாட்களாகவே கல்யாணராமன் கிராப் தலையில் பின்னால் இரண்டு மயிரை நீள வளர்த்துக் குடுமியைப் போல் வைத்துக் கொண்டிருந்தான். ஓரிரண்டு வருடங்களாகக் கல்யாணராமன் பிஸினஸில் நல்ல திருப்பம் ஏற்பட்டுப் பணம் சரளமாக வர ஆரம்பித்தது. அதைத் தொடர்ந்து வருடத்தில் இரண்டு முறை திருப்பதி வெங்கடாசலபதியின் தரிசனம், காஞ்சி ஆசார்யாளுடைய தரிசனம் என்று ஒரு புது வழக்கம் ஏற்பட்டுக் கொண்டு வந்தது. 'கல்யாணராமன் இல்லாத பகவத் கைங்கரியம் இருக்க முடியாது' என்ற நிலைமை ஏற்பட்டுக் கொண்டு வந்தது. பகவத் கைங்கர்யம் என்றதனாலேயே இவனைவிட மேல் மட்டத்தில் இருக்கும் பிரமுகர்களின் பரிசயம் கிடைக்கச் சந்தர்ப்பம் வாய்த்தது. அது பல விதங்களில் வியாபாரத்துக்கும் உதவியது!

"மிஸ்டர் கல்யாணராமன் இருக்கிறாரா?" என்று குரல் கேட்டுக் கோகிலாம்பாள் வந்தவரைப் பூசை அறைக்கு அழைத்துச் சென்றாள். கல்யாணராமன் மூடிய கண், ஜபம் செய்யும் விரல்களுடன் ஒரு சுவர் முழுவதும் தொங்கிக் கொண்டிருந்த இந்திய க்ஷேத்திர தெய்வங்கள் அத்தனையின் முன்னால் தியானச் சிலையாகச் சிரமப்பட்டு உட்கார்ந்து கொண்டிருந்தான். வந்தவன் காமிராவைத் திறந்தான். 'பளிச் பளிச்' என்று இரண்டு போட்டோக்கள் எடுத்துக் கொண்டான். கல்யாணராமன் தியானம் கலைந்தது.

"மன்னிக்கனும், காக்க வைத்துவிட்டேன். இந்த ஒன்றுதான் என்னைக் காப்பாற்றுகிறது" என்றான்.

பிறகு பேட்டி தொடங்கிற்று. "தற்காலத்தில் ஆஸ்திகத்துக்கு என்ன ஆதரவு இருக்கிறது?" என்று பத்திரிகை நிருபர் கேட்டார். "அது சுலபமாக நிர்ணயிக்க முடியாத விஷயம். ஆஸ்திகம்னா என்ன? இப்ப, என்னை எடுத்துக் கொள்ளுங்கள். ஏதோ விடியற்காலையில் எழுந்து, ஸ்நானம் செய்து, மடியாய் எனக்குத் தெரிந்த சில துதிகளைச் சொல்லி நாலு புஷ்பங்களைப் போடுகிறேன். என்னைப் பொறுத்த வரையிலும் அதுதான். சில பேர் இருக்கிறார்கள்... பார்த்தீர்களானால் வெப் பழமாகக் காட்டிவெளிப்பார்கள். வாழ்க்கையில் செய்வது என்னமோ, பாப காரியங்கள்!'

"நீங்கள் வந்திருக்கிறீர்கள். சொல்லப் போனால், இந்தப் பேட்டியில் எனக்குத் துளிக் கூட சம்மதம் இல்லை. ஏன், என்கிறீர்களா? எனக்கு விளம்பரம் துளிக்கூட பிடிக்காது. பக்தி என்பது அவனவன் செய்ய வேண்டிய கடமை!"

கூடலையில் வைத்திருந்த ரேடியோப் பெட்டியிலிருந்து மதுரமாய் வயலின் இசை கேட்டது.

"என்ன பொருத்தம் பார்த்தீர்களா? நாம் பேசிக் கொண்டிருக்கும் போது இந்தத் தியாகராஜ ஸ்வாமி கீர்த்தனத்தை வாசிக்கிறார். அதன் அர்த்தம் தெரியுமா?" என்றார் கல்யாண ராமன்.

ராகம்: தேனுகா தாளம்: தேசாதி

தெலியலேரு ராம பக்தி மார்க்கமு

இலநந்தடதிருகு கலுவரிஞ்சேரேகானி

வேகலேசி நீடமுனிகி பூதி பூஸி
வேள்ளனெஞ்சி வெலிகி சலாகநீயுலே
பாகமுக மார்ஜனலோனுலே
ரே காசி த்யாகராஜ விநுத.

(விடியற்காலையில் எழுந்து, நீராடி, விபூதி அணிந்து ஜபம் செய்வது போல் விரல்களை விட்டு எண்ணிப் பாசாங்கு செய்து, பணம் திரட்டுதலிலேயே கண்ணும் கருத்துமாய் இருப்பவர்கள், தூய ராம பக்தியை அறிய மாட்டார்கள்.)



# A Record of India's Aspirations

The Times of India Group of Publications has an amazing range of periodicals. Of these, The Illustrated Weekly of India, Femina and Filmfare offer highly stimulating and informative reading.

## The Illustrated Weekly of India

is Asia's largest selling pictorial journal. This
colourful and provocative weekly covers all areas of
human activity - industry, trade, politics, social
problems and people.

## femina

presents a balanced interpretation of the aspirations
of the Indian woman today, her new and challenging
role in the development of her country, her day-to-
day problems and experiences,

## FILMFARE

represents the largest film industry in the world. It
reports and analyses new trends and assesses its
future. This colourful and scintillating magazine
highlights the glamorous personalities, the intrigues
and exciting life of moviedom.

THE TIMES OF INDIA PUBLICATIONS

# ... கச்சேரிக்குப் போனார்!



## எடுத்தார் ஓட்டம்!

★ காஞ்சிபுரம் ஆழ்வார் பங்களாவில் ஒரு பாலசந்தர் அவர்களின் வீணைக் கச்சேரி. நானும் என் கணவரும் சென்றிருந்தோம். ஏகக் கூட்டம். ஸ்வாரஸ்யமான கட்டம்.

என் கணவர் உட்கார்ந்திருந்த திசையில் ஒருவர் பேசிக் கொண்டிருந்ததைக் கண்ட பாலசந்தர் வீணை வாசிப்பதைச் சற்று நிறுத்திவிட்டு அத்திசையில் "ஒரு விதமாக"ப் பார்த்தார். பேச்சு சத்தம் நின்றது. கச்சேரியும் தொடர்ந்தது. சில நிமிடங்கள் சென்றன. என் கணவர் ரொம்ப ஸ்வாரஸ்யமாக ரசித்துக் கொண்டிருந்தவர், அவசர அவசரமாக வாயைக் குவித்துக் கொண்டு வெளியே ஓட ஆரம்பித்தார். பக்கத்தில் இருந்தவர்கள் என்னவோ ஏதோவென்று நினைத்தார்கள். உடன் நானும் ஓடினேன்.



விவரம் என்ன தெரியுமா? அவருக்குத் தும்மல் வந்துவிட்டது! அதுவும் சாதாரணத்தும்மலா? தும்ம ஆரம்பித்தாரானால் குறைந்தது செஞ்சுரிதான். சும்மா விடுவாரா பாலசந்தர்!

விஜயா சௌந்தரராஜன், காஞ்சிபுரம்

## சினிமாப் பாட்டும் பாடினார்!

★ கோவையில் ஒரு திருமணம். இரவு கச்சேரி செய்த வித்வான் கர்னாடக சங்கீதத்தைத் தவிர வேறு எதுவும் பாடமாட்டார் என்பது ஒருவரின் வாதம். மற்றொருவர் அந்தப் பாடகரைச் சினிமாப் பாட்டுப் பாட வைக்கத் தம்மால் முடியும் என்று சவால்விட்டார். நூறு ரூபாய் பந்தயம் கட்டினர். அவரைச் சினிமாப் பாட்டுப்பாட வைப்பதாகச் சொன்னவர் ஏதோ எழுதிப் பாடகருக்குக் கொடுத்தனுப்பினார். சிறிது நேரத்தில் அவர் எழுதிக் கொடுத்தனுப்பிய சினிமாப் பாட்டு பாடப்பட்டது: பந்தயத்தில் ஜெயித்தவரை எல்லோரும் கைகுலுக்கித் தங்களுக்கு எஸ். கே. சி. (ஸ்வீட், காரம், காப்பி) கரும்படி கேட்டனர். "நான் ஜெயித்தால் எனக்கு ஒன்றுமே லாபமில்லாதபோது எப்படி டிபன், காப்பி வாங்கித் தர முடியும்?" என்றார்.




"என்ன சார்! பந்தயத்தில் நூறு ரூபாய் வாங்கப் போகிறீர்கள். இப்படிப் பேசுகிறீர்களே?" என்றனர்.

அவர்களை வாயடைத்துப் போகச் செய்த பதில்: "அந்தப் பாட்டின் பெயரை நான் நூறு ரூபாய் நோட்டில் அல்லவா எழுதி அனுப்பினேன்! அதனால்தானே வித்வான் அந்தப் பாடலைப் பாடினார்!"

- எஸ். ராஜலட்சுமி, பெரியகுளம்.

## மனம் இரங்காதா, முருகா!



★ சோமு கச்சேரி என்றால் உருக்கமான பக்திப் பாடல்களுக்குக் குறைவு இராது. ஜனரஞ்சகமாகவும், சமயோசிதமாகவும் பாடுவதில் அவருக்கு நிகர் அவர்தான்.

தி. நகரில் ஒருமுறை ரசிகர்கள் ஜமக்காளத்தில் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தனர். ஒரு கீர்த்தனையை முடித்துவிட்டு அடுத்த பாட்டை ஆரம்பிக்கும் சமயம். முன் வரிசையில் இருந்த ஒருவர் ஏதோ அவசரமாய்த் தாம் பக்கத்தில் கழற்றி வைத்திருந்த பாதரட்சைகளைக் கையில் எடுத்துக்கொண்டு எழுந்து வெளியே போகப் புறப்பட்டார்.

இதைப் பார்த்த சோமு அவர்கள், தாம் பயப்படுவது போல் அபிநயித்துவிட்டு உடனே அவரைப் பார்த்துக் கையைக் கும்பித்து "எத்தனை தான் பாடினாலும் இவர்கள் மனம் இரங்கவில்லை முருகா" என்ற பாட்டை ஆரம்பித்தார். கரகோஷம் வானைப் பிளந்தது.



- கோமதி சுப்பிரமணியம், நாகர்கோவில்.

## ஓசி பாத்தின் சுகம்!

★ பம்பாய் சண்முகானந்தா ஹாலில் ஒரு பிரபல பாடகரின் கச்சேரி. கச்சேரிக்கு இலவச பாஸ் கிடைத்திருந்ததால் என் கணவர் என்றும் இல்லாத திருநாளாக "நான் கச்சேரிக்குப் போகிறேன்" என்றார். பல ராகங்களில் பாடிய பிறகு வித்வான் சஹானா ஆலாபனை ஆரம்பித்தார். என் கணவருக்கு சஹானா ரொம்பப் பிடிக்கும். ஆனால் அப்போது பார்த்து அவருக்கு "குழாயை மூடிவிட்டு வந்தோமா இல்லையா?" என்ற சந்தேகம் தோன்றிவிட்டது. எங்கள் வீட்டில் சில குறிப்பிட்ட நேரங்களில்தான் குடிதண்ணீர் வரும். எனவே மூடாமல் வருவதற்கு வாய்ப்புண்டு. நாங்கள் இருப்பதோ செம்பூர். கச்சேரி நடப்பதோ மாதுங்கா. உடனே வெளியே வந்து அவசரமாக டாக்ஸி பிடித்து வீடு சேர்ந்தோம். இரண்டு மாடி ஏறிக் கதவைத் திறந்து பார்த்தால் குழாய் நன்றாக அழுந்த மூடியிருந்தது. அப்போது எப்படி இருந்திருக்கும்? ஆத்திரம் தீர, சூடு தணிய அந்த டிசம்பர் குளிரில் குழாய் முழுவதும் திறந்து விட்டுக் குளித்த பிறகே வெளியே வந்தார். கான மழையில் பாதி குளித்தவருக்கு முழுமையாகக் குளிர்ந்த நீரில் குளிக்க நேர்ந்தது. பூரா பாட்டையும் ரசிக்க முடியாமல் போனது. அனாவசிய டாக்ஸி செலவு, எல்லாவற்றுக்கும் மேலாக ஓசி பாஸின் சுகத்தை அனுபவிக்க முடியாமல் போனதே என் கணவருக்கும் பெரிய குறை!



லக்ஷ்மி சங்கர், பம்பாய்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 20. கல்கி நடத்தி வைத்த கல்யாணங்கள்

வேங்கடராமனும் கிருஷ்ணமூர்த்தியும் ஏதேதோ பொது விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். கல்யாண விஷயத்தை அண்ணாவும் எடுக்கவில்லை; தம்பியும் எடுக்கவில்லை.

மாலையில் கல்கி, தேனாம்பேட்டை தாவரக் காட்சித் தோட்டத்துக்கு அண்ணாவைக் கூட்டிச் சென்றார். ''இங்கே, நான் அடிக்கடி வருவதுண்டு'' என்று சொன்னார். ''கையிலே புஸ்தகம் கொண்டு வந்து ஹாய்யாக ஏதாவது மரத்தடியில் உட்கார்ந்து படிப்பேன்.''

''நம்ம ஊர் ஆலமரத்தடியிலே படிச்ச ஞாபகம் வரும் இல்லையா?''



இருவரும் ஒரு பெஞ்சில் அமர்ந்தார்கள். அந்தத் தோட்டத்தின் காப்பாளர் ஓர் ஆங்கிலோ இந்தியர், அவர்களை அணுகி, வேறு ஏதேனும் பெஞ்சில் உட்காரும்படி கட்டளை இடுவது போல் சொன்னார்.

''ஏன்?'' என்று கேட்டார் கிருஷ்ணமூர்த்தி.

''அதோ வருகிறார்களே ஜட்ஜ் துரையும், துரைசாணியும், அவர்கள் வழக்கமாக உட்காருகிற பெஞ்சு இது.''

எழுந்திருக்க முயன்ற அண்ணாவைத் தம்பி ஜாடைகாட்டி அமர்த்திவிட்டு, ''இது அவர்களுடைய சொந்த பெஞ்சா?'' என்று கேட்டார்.

''அனாவசியமான கேள்வி எல்லாம் வேண்டாம்.''

''இது பொதுத் தோட்டம். வெள்ளைக்காரர்களாயிருந்தாலும் தனியுரிமை கொண்டாட முடியாது.''

''அப்போ நீங்கள் காலி செய்ய மாட்டீர்களா?'' என்று அந்த ஆங்கிலோ இந்தியர் சத்தம் போட்டுக் கேட்டார்.

''அவர்களாக வந்து மரியாதையாகக் கேட்டுக் கொண்டால் மட்டுமே காலி செய்வோம்.''

அதற்குள் அங்கே வந்துவிட்ட வெள்ளைக்கார நீதிபதி, வாக்குவாதம் எதைப் பற்றி என்பதை ஊகித்து, தோட்ட

● தேனாம்பேட்டை தாவரக் காட்சித் தோட்டத்துக்கு அண்ணாவைக் கூட்டிச் சென்றார் கல்கி. ''இங்கே நான் அடிக்கடி வருவதுண்டு. ஏதாவது மரத்தடியில் உட்கார்ந்து புத்தகம் படிப்பேன்.''



● கல்கி நடத்திவைத்த கல்யாணம். அண்ணா வேங்கடராமனும் தம்பி கிருஷ்ணமூர்த்தியும் மருமான் ''நாணு''வின் திருமணத்தில். இடப்புறமுள்ள மற்றொரு மாப்பிள்ளை நாணுவின் ஷட்டகர்.





● "சம்பு சாஸ்திரி பெண்ணுக்கு இப்படிப்பட்ட மாப்பிள்ளையா என்று அசூயைப்பட்டார்கள்!" - தியாக பூமியில் சம்பு சாஸ்திரியும் கதாநாயகன் - நாயகி ஸ்ரீதரன் சாவித்திரியும். - நடித்தவர்கள் முறையே பாபநாசம் சிவன், கே. ஜே. மகாதேவன், எஸ். டி. சுப்புலக்ஷ்மி.

அதிகாரியைப் பார்த்து, "அவர்களைத் தொந்தரவு செய்யாதே" என்று கூறிவிட்டு, துரைசாமியை அணைத்துக் கொண்டு வேறொரு பெஞ்சை நோக்கி நடந்தார்.

"நீ ஏற்கனவே துணிச்சல்காரன். பட்டணத்துக்கு வந்து இன்னும் தைரியசாலி ஆகிவிட்டாய்!" என்று அண்ணா மெச்சினார்.

"என்னைக் கேளாமல், எனக்கு நீ கல்யாணம் நிச்சயம் பண்ணினையே, அதைவிடத் துணிச்சலானது ஒன்று உண்டா?" என்று தம்பி, அதுவரை அடக்கி வைத்திருந்த ஆத்திரத்தை வெளியே கொட்டினார்.

அதைத் தொடர்ந்து இருவருக்கும் இடையே நெடுநேரம் வாக்குவாதம்.. யாரும் யாருக்கும் விட்டுக் கொடாமல் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் கிருஷ்ணமூர்த்தி அலுத்துப்போய் "நாம் ஒன்று செய்யலாம்" என்றார். "நான் திரு வி. க.வை ரொம்பவும் மதிக்கிறேன். எல்லாவற்றையும் அவரிடம் தெரிவிப்போம். அவர் என்ன சொல்கிறாரோ அதன்படி நடப்போம்."

அண்ணா சம்மதிக்கவே, அவரைக் குகானந்த நிலயத்துக்குத் தம்பி கூட்டிச் சென்று, தமது ஆசிரியருக்கு அறிமுகம் செய்துவைத்து, "நீயே எல்லாவற்றையும் சொல்லு" என்றார்.

திரு வி. க. பொறுமையாய்க் கேட்டுவிட்டு, "ஜாதகப் பொருத்தம் பார்த்தீர்களோ?" என வினவினார்.

"இல்லே, மனப் பொருத்தம்தான்" என்றார் அண்ணா.

"அதாவது, பிள்ளையின் மனத்தைத் தவிர, மற்றவர்களின் மனப் பொருத்தம்" என்றார் கிருஷ்ணமூர்த்தி. பிறகு தம் ஆசிரியரைப் பார்த்து, "உண்மை

● எதிர்வாதத்துக்கு இடம் வைக்காதபடி மண வாழ்த்தே கூறிவிட்டார் ராயப்பேட்டை முனிவர்.



● அந்த ஓலையில் சீதா கல்யாணம். சந்திரா ஓவியம்.



யிலேயே உங்களுக்கு ஜாதகம் ஜோதிடம் இதிலெல்லாம் நம்பிக்கை உண்டா என்ன?'' என்று கேட்டார்.

''உண்டு'' என்றார் திரு வி. க. ''நமது முன்னோர்கள் கண்ட கலை அது. இந்தக் கலை மூலம் வருங்கால நிகழ்ச்சிகளை உணர்ந்து, கடவுளின் கருணையை வேண்டி வினைகளை வெல்லலாம். முன்பெல்லாம் நான் சோதிடம் கேட்பதில் அதிகம் விருப்பம் கொண்டிருந்தேன். நாளடைவில் விருப்பம் குறைந்து போயிற்று. ஆனால் வெறுப்பு இல்லை. கோளையும் நாளையும் இயக்கும் பெருஞ் சக்தியிடம் இப்போது கருத்தைச் செலுத்துகிறேன். அவளின்றி ஓர் அணுவும் அசையாது.''

(இந்தக் கருத்துக்கள் அவருடைய ''வாழ்க்கைக் குறிப்புக்கள்'' நூலில் உள்ளவை.)

கண்களை மூடிச் சிறிது யோசித்து விட்டுத் திரு வி. க. தொடர்ந்தார்: ''பெரியோர்கள் கல்யாணத்தை நிச்சயம் செய்வது நமது ஹிந்து தர்மத்துக்கு ஏற்றதே. வேறு விஷயங்களிலே நான் புதுமைக் கருத்துக்கள் கொண்டவனாயினும், கல்யாண விஷயத்தில் பழைமைக் கருத்தே கொண்டவன்... கல்யாணமே வேண்டாம் என்று நீங்கள் நினைத்தால் அது சரியல்ல. இல்லறத்தில் இருந்தே தாய்நாட்டுக்கும் தாய் மொழிக்கும் பணி செய்ய முடியும். நமது காந்தி அடிகளையே பார்த்துக் கொள்ளலாம். உங்களைச் சில மாதங்களாய்க் கவனித்து வந்ததில், நீங்கள் பெரும் பணிகள் செய்யக்கூடியவர் என்பதை உணர்கிறேன். இந்தப் பணிகளுக்கு இல்லறம் வலிமையூட்டும். உங்கள் அண்ணா நிச்சயம் செய்திருக்கும் பெண் நல்ல மனைவியாளாய் இருப்பதில் ஐயம் வேண்டாம். எல்லாம் ஆண்டவன் ஆணை. நடப்பது நடக்கவே செய்யும். நல்லபடியாய் நடக்க இறைவனை வேண்டுகிறேன்.''

எதிர்வாதத்துக்கு இடம் வைக்காதபடி, அந்த முனிவர் மணவாழ்த்தே கூறி விட்டார். அண்ணாவும் தம்பியும் உணர்ச்சிவசப்பட்டு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

எத்தனையோ கல்யாணங்களை இந்த வரலாற்றின் நாயகர் நடத்தி வைத்திருக்கிறார் — தமது கதைகளில்! இவற்றில், தஞ்சாவூர்க் கிராமங்களில் நடந்த இரண்டு கல்யாணங்களின் வர்ணனைகளை இங்கே பார்ப்போம். (உண்மையில், மூன்று கல்யாணங்கள் என்று சொல்ல வேண்டும்; ஏனெனில், ஒரு கிராமத்தில் நடந்தது, ஒரே பந்தலில் இரட்டைக் கல்யாணம்!)

முதலாவதாக, ''தியாக பூமி'' நாவலில், நெடுங்கரை கிராமத்து ஒற்றைக் கல்யாணம் :

சம்பு சாஸ்திரி வீட்டு வாசலில் பந்தல் கால் முகூர்த்தம் ஆனதிலிருந்து, ஊரில் கல்யாணக் களை ஏற்பட்டுவிட்டது. அக்கிரகாரத்தில் சரி பாதியை அடைத்துப் பந்தல் போட்டார்கள். வாழை மரங்களும் திரைச் சீலைகளும் கொண்டு வந்து கட்டினார்கள்....

சமையலுக்குக் குண்டு கிருஷ்ணனை அமர்த்தி அவன் ஒன்பது ஆட்களுடன் வருவதற்கு ஏற்பாடு செய்தார்கள். உள்ளூர்க் கோயில் மேளக்காரனுடன், திருநாகேசுரம் தங்க நாயனத்துக்கும் அச்சாரம் கொடுக்கப்பட்டது. இரண்டு நாள் கதாகாலட்சேபத்துக்குச் சம்பு சாஸ்திரி ஏற்பாடு செய்து விட்டார்.

கல்யாணத்துக்கு இரண்டு நாளைக்கு முன்பிருந்தே சமையல்காரர்கள் வந்து சமையல் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அப்புறம் அக்கிரகாரத்தில் பாட்டியம்மாள்களையும் வியாதிக்காரர்களையும் தவிர, பாக்கி எல்லாருக்கும் கல்யாண வீட்டில்தான் சாப்பாடு....

கல்யாணத்துக்கு முதல் நாள், பந்துக்களும், சிநேகிதர்களும், வைதிகர்களும், கதைக் கச்சேரி கேட்கலாம் என்று வந்தவர்களும், கல்யாணச் சாப்பாட்டை உத்தேசித்தே வந்தவர்களுமாக, ஊர் ஜே ஜே என்று ஆகி விட்டது....

'ஜானவாஸ' ஊர்வலம் ஆரம்பமாயிற்று. அதற்காக வந்திருந்த கோச் வண்டியில் மாப்பிள்ளை ஸ்ரீதரன் ஜம்மென்று உட்கார்ந்திருந்தான். விலை உயர்ந்த ட்வீட் துணியில் தைத்த கால் சட்டையும் மேல் சட்டையும், காலரும் நெக்டையும் தரித்து, கிராப் செய்த தலையை அழகாக வாரி விட்டுக்கொண்டு, நெற்றியில் சின்னஞ்சிறு சாந்துப் பொட்டுடன் அவன் அலட்சியமாகக் கோச் வண்டியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்த நெடுங்கரைவாசிகள், 'இந்தச் சம்பு சாஸ்திரி பெண்ணுக்கு இப்படிப்பட்ட மாப்பிள்ளையா !' என்று மனத்துக்குள் அசூயைப் பட்டார்கள். ஆனால் வெளியில், ''மாப்பிள்ளை அவ்வளவு ஆசாரமாக இருக்கமாட்டான் போல இருக்கு. போகப் போகத் தெரியணும்'' என்றும், ''தலையை ஏன் இப்படி விகாரம் பண்ணிண்டிருக்கான்? அழகாகக் கட்டுக் குடுமி வச்சிண்டிருக்கப்படாதோ?'' என்றும், ''சம்பு சாஸ்திரியின் கர்நாடகத்துக்கும் இந்தப் பிள்ளையின் டவுன் நாகரிகத்துக்கும் எங்கே சரிப்பட்டு வரப் போகிறது?'' என்றும் பலவாறு பேசிக் கொண்டார்கள்....

''மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானுக்குப் பெண் பிடிக்கவில்லையாம். கல்யாணம் வேண்டாம், ஊருக்குப் போகணும்கிறானாம்'' என்று ஒரு வதந்தி பரவிற்று. ''அவன் இன்னும் பெண்ணையே பார்க்கவில்லையே ?'' என்று சிலர் கேட்டார்கள். ''பெண்ணின் அப்பாவைப் பார்த்ததுமே பையனுக்குப் போறும்னு ஆயிட்டதாம் !'' என்று ஒரு ஹாஸ்யப் பிரியர் சொன்னார். ''சீச் !

அதெல்லாம் இல்லேடா! ஊர் கோலத்துக்கு மோட்டார் வைக்கலேன்னுதான் பையனுக்குக் கோபமாம். சுத்த கர்நாடகமா, கோச் வண்டியில் உட்கார்ந்து ஊர்கோலம் வந்தது அவனுக்குப் பிடிக்கலையாம்'' என்றார் இன்னொருவர்......

(இதே போல வம்பு வேடிக்கைப் பேச்சுகள்; பிறகு சங்கர தீட்சிதரின் வினையான வத்தி வைப்பு காரணமாய், சம்பு சாஸ்திரி சம்பந்திகளுக்கு அபராதம் செலுத்துதல் எல்லாம் ஆனபின் ஸ்ரீதரன் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட சுப லக்னத்தில் சாவித்திரிக்குத் தாலி கட்டுகிறான்.)

அதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு முதன் முதலாக, கல்யாணப் பந்தலில் மாலை மாற்றும் சந்தர்ப்பத்தில், ஸ்ரீதரன் சாவித்திரியைப் பார்த்தான். சாவித்திரி அப்போது குனிந்த தலை நிமிராமல் இருந்தாள். கிராமாந்தர வழக்கப்படி அவளுக்குப் பதினெட்டு முழப் புடவை உடுத்தி, தலையில் பழைய காலத்து நகைகள் எல்லாம் அணிவித்து அலங்காரம் செய்திருந்தார்கள். அதைப் பார்த்த ஸ்ரீதரன், ''கர்நாடகம் என்றால் படு கர்நாடகம்'' என்று தீர்மானித்துக் கொண்டான்....

சாவித்திரி முதன் முதலாக ஸ்ரீதரனைப் பார்த்தபோது, அவள் உடல் முழுவதும் மகிழ்ச்சியினால் ஒரு குலுங்கு குலுங்கிற்று. அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தபடி ஸ்ரீதரன் உச்சிக் குடுமியுடன் இராமல், நாகரிகமாகக் கிராப் வைத்துக் கொண்டிருப்பதையும், சிவந்த மேனியுடன் சுந்தர புருஷனாய் விளங்குவதையும் கண்டதும், கர்வத்தினால் அவள் உடல் பூரித்தது. திருமாங்கல்யதாரணத்துக்கு முன்னால், பட்டுத் துணியினால் மறைக்கப்பட்ட சமயம், ஸ்ரீதரனுடைய முகத்தைப் பார்த்த போது, அவளுக்கு மயிர்க் கூச்சல் எடுத்தது. கண்களில் ஜலம் வந்துவிட்டது.....

கல்யாண நாலு நாட்களும் சாவித்திரி இந்த உலகத்திலேயே இருக்கவில்லை. துயரம் என்பதே இல்லாத ஆனந்தக் கற்பனாலோகத்தில் வசித்து வந்தாள்.....

கல்யாணம் அமர்க்களமாகத்தான் நடந்தது. இந்தக் கல்யாணத்தில் எப்போது பார்த்தாலும் அண்டா நிறையக் காப்பி தயாராக இருந்ததையும், நினைத்தவர்கள் நினைத்தபோது காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்ததையும் பற்றி அந்தப் பிரதேசத்தில் வெகு நாளைக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அக்கிரகாரத்தில் முக்கால்வாசி வீடுகளில் ஆறு மாதங்களுக்குக் காப்பிக்கு வேண்டிய சர்க்கரை கல்கண்டு இந்தக் கல்யாணத்தில் சேர்ந்துவிட்டது.....

உண்மையில், இந்தக் கல்யாணத்தில் ஆன வீண் செலவுகளைப் பற்றிச் சம்பந்தி அம்மாளே புகார் சொல்லும்படி இருந்தது.

(முதல் பாகம் அத்தியாயங்கள் 10,11)

இரண்டாவதாக, ''அலைஓசை'' நாவலில் வரும் கல்யாணம் — ராஜம் பேட்டை இரட்டைக் கல்யாணம்:

கிட்டாவய்யர் வீட்டுக் கல்யாணம் என்றால் சாதாரண விஷயமா! விவாக தினத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்னாலேயே மேளம் கொட்டியாகிவிட்டது. பிறகு ஊரில் எந்த வீட்டிலும் அடுப்பு மூட்டப்படவில்லை. எல்லாருக்கும் சாப்பாடு கிட்டாவய்யர் வீட்டிலேதான்.

வீதி முழுவதும் அடைத்துப் போட்டிருந்த பந்தலில் ஊர்க் குழந்தைகள் சதா காலமும் கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

மாட்டுச் சதங்கைகளின் சத்தம் கேட்ட வண்ணமாக இருந்தது. வண்டிகளுக்கு ஓய்ச்சல் ஒழிவென்பதே இடையாது. கல்யாணத்துக்கு முதல் நாள் இரண்டு கல்யாணத்துச் சம்பந்திகளும் வந்துவிட்டார்கள். பிறகு ஊருக்கு உத்சவத் தோற்றம் உண்டாகிவிட்டது. தேர்த் திருவிழா மாதிரி ஜே ஜே என்று ஏகக் கூட்டம். ஜானவாச ஊர்வலம் மேள தாளங்களுடனும் மத்தாப்பு வாண வேடிக்கைகளுடனும் அமோகமாக நடந்தது.

மறு நாள் பொழுது விடிவதற்குள் கல்யாண முகூர்த்தத்துக்கு உரிய ஏற்பாடுகள் தொடங்கிவிட்டன. பத்து மணிக்குள்ளே முகூர்த்தமாகையால், ஒரே பரபரப்பாகக் காரியங்கள் நடைபெற்றன. ''முகூர்த்தம் வந்துவிட்டது, சீக்கிரம் ,சீக்கிரம்'' என்று தலைக்குத் தலை கூச்சல் போட்டார்கள். மாப்பிள்ளைகள் இரண்டு பேரும் காசி யாத்திரை புறப்பட்டுப் பத்து அடி தூரம் போகக்கூட இடம் கொடுக்கவில்லை. ''எல்லாம் போதும், காசிக்கே போய்விடாதீர்கள்!'' என்று சத்தம் போட்டார்கள். மாமா தோள் தூக்குவது, மாலை மாற்றுவது எல்லாம் சட்பட் என்று நடந்தன. கன்னிகாதான — திருமாங்கல்ய தாரணத்துக்கு உரிய நல்ல முகூர்த்தம் வந்தது. இரட்டை நாதஸ்வரங்கள் காதைத் துளைக்கும்படி இரைச்சலிட, தவுல் வாத்தியங்கள் அடித்த அடியில் வீடெல்லாம் கிடுகிடுக்க, வேத மந்திர கோஷங்கள் வானை அளாவ, வீட்டு ஸ்திரீகள் நாற்றெட்டு அபஸ்வரங்களுடன் ''கௌரீ கல்யாணம்'' பாட, சீதாவின் கழுத்தில் ஸ்ரீ சௌந்தர ராகவன் திருமாங்கல்யத்தைக் கட்டினான். அதே சமயத்தில் பட்டாபிராமன் லலிதாவின் கழுத்தில் தாலியைக் கட்டி முடிச்சுப் போட்டான்.

(முதல்பாகம் அத்தியாயம் 34)

இந்தக் கல்யாணங்களைப் போல் ரொம்ப எடுப்பானதல்ல, தலையூரில் நடந்த கல்கியின் கல்யாணம். ஆனால் இந்த வரலாற்று நாயகரின் கல்யாணமாதலால், அது, அவர் வர்ணித்துள்ள கல்யாணங்களைவிடச் சிறப்பானதே.

உடனிருந்தோர் ஞாபகத்திலிருந்து சொன்ன விவரங்களுடன் கொஞ்சம் ஊகத்தையும் சேர்த்துக் கொண்டு, கல்கியின் கல்யாணம் எப்படி நடந்தது என்பதைப் பார்க்கலாம். (தொடரும்)




அறையில் மான் தோல் விரிக்கப்பட்டிருந்த மெத்தென்ற ஆசனத்தில் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருக்கு வலதுகைப் புறத்தில் ராமர், கிருஷ்ணர், பத்ரி நாராயணன், குருவாயூரப்பன் என்று பெரிய அளவில் ஸ்வாமி படங்கள் நன்கு பூக்களால் அலங்கரிக்கப்பட்டுத் தெய்வீக மணம் வீசிக் கொண்டிருந்தன.

''ஸ்வாமிஜி! இவள் என் தமையன் மகள். டில்லியிலிருந்து வந்திருக்கிறாள். ஸ்வாமிஜியின் பஜனை வகுப்பைப் பற்றியும், பிரசங்கங்களைப் பற்றியும் அண்ணாவுக்கு எழுதி இருந்தேன். லீவுக்கு அவர் பெண்ணை அனுப்பிப் பஜனை நாமாவளிகளைக் கற்றுக் கொள்ளும்படி அனுப்பி இருக்கிறார்'' என்று அந்தப் பெண்ணை அழைத்து வந்தவன் பவ்யமாய் ஸ்வாமிஜிக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

ஸ்வாமிஜியின் கருணை கடாட்சம் அந்தப் பெண்ணின் மேல் விழுந்தது.

''ஸ்வாமிஜியைக் கிட்ட போய் நமஸ்காரம் பண்ணு'' என்றான் வந்தவன். அந்தப் பெண்ணும் அவரை நமஸ்கரித்துக் கால்களைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக் கொண்டாள். அவளை சமிக்ஞை செய்து பக்கத்தில் அழைத்தார். அவரை அணுகி உடல் நடுங்க நின்றாள். தலையை வருடிவிட்டுப் பக்கத்தில் திரும்பினார். ஸ்வாமிஜியின் காரியதரிசி அவர் எண்ணத்தைப் புரிந்து கொண்டார். வருகிறவர்கள் தட்டுத் தட்டாய்க் கொண்டு வந்து ஸ்வாமி படங்களுக்கு முன் நிவேதனமாக வைக்கும் பொருள்களிலிருந்து ஒரு கல்கண்டை மட்டும் எடுத்து ஸ்வாமிகளிடம் கொடுத்தார். அதை வாங்கிப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெண்ணிடம் கொடுத்து வாயில் போட்டுக் கொள் என்று சமிக்ஞை செய்தார். அந்தப் பெண்ணை அழைத்து வந்தவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. ''என்ன பாக்கியம்!'' என்று உள்ளம் புல்லரித்தது.

இது போல் அநேகம் பேர் ஸ்வாமிஜியை அணுகி, நமஸ்கரித்து நின்றிருக்கின்றனர். இம்மாதிரி கல்கண்டு கொடுக்கும் பாக்கியம் மாதத்தில் ஒருவருக்குக் கிடைத்தால் அதிகம்.

ஸ்வாமிஜி எங்கிருந்து வந்தார்? அவர் பூர்வாச்ரமம் என்ன? யாரிடம் உபதேசம் பெற்றார்? இவை போன்ற தகவல்கள் யாருக்கும் தெரியாது. இம்மாதிரி விஷயங்களைக் கேட்பதோ, ஆராய்வதோ பாகவதோத்தமர்களை நிந்திப்பதாகும் என்ற மனப்பான்மை பலரிடம் ஊன்றியிருந்தது.

'' சித்ரா ! இன்று உனக்குப் பெருத்த அதிர்ஷ்டம்மா. நானும் ஒரு வருஷமாய்ப் போய்க் கொண்டிருக்கிறேன். அறிமுகப் படுத்திய முதல் நாளே ஒருவருக்கும் அவர் கையால் கல்கண்டு கொடுத்தது கிடையாது. இன்றைக்கே அண்ணாவுக்குக் கடிதம் எழுதிப் போடுகிறேன்'' என்றான்.

''மூணு மணி, நாலு மணி பஜனை வெறும் போர். அந்த ஸ்வாமிஜி என்னைப் பக்கத்திலே அழைத்து, தலையைத் தடவி, கல்கண்டு கொடுத்தது சுத்த வேஷம். அவர் என்னைப் பார்த்த விதம் பிடிக்கவில்லை'' என்று கடகடவென்று சித்ரா தன் அபிப்பிராயத்தைப் பகிரங்கமாகச் சொன்னாள்.

இதை அடுத்து மற்ற பஜனை நாட்களுக்குச் சித்ராவை அழைத்துக் கொண்டு போகவில்லை.



# கீர்த்தனைக் கதை-5

ஆனால் ஒரு நாள், ''உன்னோடு ஒரு குழந்தை வருமே எங்கே காணோம்?'' என்று குசலம் விசாரித்தார் ஸ்வாமிஜி. ''திடீர்னு ஊருக்கு வரச் சொல்லி அண்ணாவிடமிருந்து கடிதம் வந்தது. போய்விட்டாள்'' என்று பொய் சொல்லிச் சமாளித்துக் கொண்டாள்.

அமெரிக்காவிலிருந்து இருபது பெண்கள் ஸ்வாமிஜியின் பஜனையைப் பற்றிக் கேள்விப் பட்டு அவரை எப்படியாவது அமெரிக்காவுக்கு அழைத்துக் கொண்டு போய் அநேக பஜனை நிலையங்கள் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் வந்திருந்தனர். ஒவ்வொருவரையும் குசலம் விசாரித்துத் தடவிக் கொடுத்துப் பஜனையின் மேன்மையை விளக்கினார் ஸ்வாமிஜி.

''நாங்கள் ஹரே ராம, ஹரே கிருஷ்ண பஜனையை அமெரிக்காவில் கேட்டிருக்கிறோம். சில நாட்கள் அதில் கலந்து கொண்டும் இருக்கிறோம்'' என்று அதை நிரூபிப்பது போல் கைகளைத் தட்டி, பாடினர். ஸ்வாமிஜியின் முகம் ஆனந்தத்தில் மூழ்கியது.

அவ்வளவுதான். ஸ்வாமிஜி அவருடைய ஆச்ரமத்தை விட்டு அமெரிக்கா போய்விட்டார். அமெரிக்காவில் எங்கே போனாலும் அமோக வரவேற்பு. கலிபோர்னியா, வாஷிங்டன், நியூயார்க். இம்மாதிரி பெரும் பெரும் நகரங்களில் ஸ்வாமிஜியின் ஆசிரமங்கள் துவங்கின. இந்தியாவிலும் அவர் இல்லாமல் நடந்து வந்த ஆசிரமத்துக்கு அமெரிக்காவிலிருந்து பணம் வந்து குவிந்தது.

சில காலம் பொறுத்து மறுபடியும் ஸ்வாமிஜி இந்தியாவுக்கு வந்தார், பட்டணத்துக்கு வந்தபொழுது, விமான நிலையத்தில் அமோக வரவேற்பு. அமெரிக்காவின் சீதோஷ்ண நிலையும், பாலும், பழமும் ஸ்வாமியின் மேனிக்குத் தனி மெருகு ஏற்றி இருந்தன. இம்பாலா காரில் விமான நிலையத்திலிருந்து தமது பட்டணத்து ஆசிரமத்துக்குச் சென்றார். ஸ்பெஷல் பஜனை அன்று ஏற்பாடாகி இருந்தது. அது கோலாகலத்துடன் முடிவடைந்ததும் சித்ராவை முன்பு அறிமுகம் செய்து வைத்தவள் ஸ்வாமிஜியை அணுகினாள்.

''என்னம்மா! சௌக்கியமா?''

''ஸ்வாமிஜியின் அனுக்கிரகத்தில் ஒரு குறையும் இல்லை'' என்று சொல்லிக் கொண்டே பக்கத்திலிருந்த தன் பெண் குமுதாவை அவருக்கு அறிமுகம் செய்து, ''இவளுக்கு இந்த வருஷம் சங்கீத விழாவில் முதன் முதலாகக் கச்சேரி செய்ய வாய்ப்பு கிடைத்திருக்கிறது. உங்கள் முன் ஒரு பாட்டைப் பாடச் சொல்லி ஆசி பெற ஆசை.'' என்று குழைந்தாள்.

ஆசனத்திலிருந்து எழுந்தவர் மறுபடியும் உட்கார்ந்தார். ''பேஷ்! குழந்தை, பாடம்மா!'' என்றார்.

குமுதாவின் உடல் நடுங்கிற்று. எதைப் பாடுவது என்று ஒரே குழப்பம்.

''சீக்கிரம் குமுதா! ஸ்வாமிஜிக்கு நாழியாகிறது'' என்று பெண்ணை உந்தினாள். கிணற்றிலிருந்து வருவது போன்ற குரலில் தியாகராஜ கீர்த்தனையை இசைத்தாள் குமுதா:

ராகம்: யதுகுல காம்போதி   தாளம்: ஆதி

பல்லவி

அதிகாது பஜன மனஸா

அனுபல்லவி

எதலோ நெஞ்சுகடொகடி பய்
யெதலோ கல்மிதஸோ நொகடி

சரணம்

கொப்ப தனமுகை யாஸ
குத்சித விஷய பிபாஸ
மெப்புலகை பதரு வேஷமிடி
உப்பதில்லெகரு தியாகராஜ விநுத

(உள்ளத்தில் ஒன்று நினைத்து, வெளிக்கு ஒரு காரியம் என்று இருந்தால் அது பஜனையல்ல. பெரிய சம்பத்து அடைய வேண்டும் என்ற ஆசையாலும், சிற்றின்ப வேட்கைக்காகவும், புகழுக்காகவும் வேஷம் பூண்டு செய்யும் பஜனை பஜனையல்ல.)

# இதைக் கவனமாகப் படியுங்கள்! வியப்பினால் அதிர்ந்து போவீர்கள்!

SAA/TVS/1507

உங்கள் பணம் அது. புகையாய்ப் போகிறது. ஆம். எரியாத டீஸல் அது. பாடுபட்டு வாங்கிய டீஸல். (பஸ், டிரக் சொந்தக்காரர்களின் நஷ்டத்திற்குப் பெரும் காரணம் என்ஜின் பராமரிப்பில் கவனக் குறைவே) கவலைப்பட மற்றொரு காரணம் உண்டு: நீங்கள் சுவாசிக்கும் காற்றை இந்தப் புகை அசுத்தப்படுத்துகிறது. போதும் நிறுத்துங்கள். நிம்மதியாக மூச்சு விடுங்கள். இதற்கு என்னதான் வழி? இதோ நம் அனைவரையும் பாதுகாப்பான சூழ்நிலையில் வைக்க சில குறிப்புகள் உள்ளன; உங்கள் டீஸலை மிச்சம் பிடிக்க உதவும் குறிப்புகள்.

வண்டி துள்ளிக்குதிக்கும்படி ஸ்டார்ட் செய்யவேண்டாம்; வண்டியை சீரான வேகத்தில் ஓட்டவும்; நீண்ட நேரம் 'ஐடிலிங்' இருப்பதைத் தவிர்க்கவும்; டயர் காற்றழுத்தம் எப்போதும் சீராக இருக்கும்படி பார்த்துக்கொள்ளவும்; தேவையற்றபோது கீழ் கியர்களைப் போடவேண்டாம்.

பியூயல் இன்ஜெக்ஷன் சாதனத்தை, சரியான இடைவெளிக்காலத்தில் அவ்வப்போது பழுதுபார்க்கும் நிலையத்தில் 'காலிபிரேட்' செய்து கொள்ளவும்.

தேய்மானமுள்ள டிரைவ் லைன், தவறான ஸ்டீரிங் தொடர்புகள், சீர் அற்ற சக்கர ஒழுங்கு ஆகிய குறைகள் அதிக டீஸல் செலவுக்குக் காரணமாகின்றன.

குறைகளை உடனுக்குடனே சீர்படுத்திக்கொள்ள முனையுங்கள். காற்று, எண்ணெய், டீஸல் — வடிகட்டிகளைக் கவனித்து வரவேண்டும். இந்த கவனம் இருந்தால் என்ஜின் நன்கு உழைக்கும்; நீடித்து உழைக்கும். பியூயல் பம்பும் நீடித்து வரும். மொத்தத்தில் உங்களுக்குப் பெரும் சிக்கனம்.

இவையெல்லாம் டீஸல் உபயோகத்தில் கணிசமான சேமிப்பு ஆகும்.

டீஸல் சிக்கனம் — உங்களுக்கு மட்டுமல்ல இந்நாட்டிற்கே.

நெருக்கடியை வருமுன் தவிர்ப்போம்!




இலவசம், "டீஸல் சிக்கனம்" பற்றி எங்களது வெளியீட்டினை பல டிவிஎஸ் அலுவலகங்களிலிருந்து பெற்றுக்கொள்ளுங்கள்.

உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்




டி வி சுந்தரம் ஐயங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்

சுந்தரம் மோட்டார்ஸ்

மதராஸ் ஆட்டோ சர்வீஸ்

பெங்களூர், கள்ளிக்கோட்டை, கொச்சி, கோயம்புத்தூர், ஹுப்ளி, ஹைதராபாத், சென்னை, மதுரை, மங்களூர், மைசூர், புதுக்கோட்டை, சேலம், செகந்தராபாத், திருநெல்வேலி, திருச்சி, திருவனந்தபுரம், விஜயவாடா, விசாகப்பட்டினம்.

சாலை போக்குவரத்துத் துறையினர் நலம் கருதி வெளியிடப் பெறுகிறது.

## 23. திரவியம் தேடச் சில வழிகள்

தோளை யாரோ தொடுவதை உணர்ந்து திரும்பினான், சம்பத்.

"ஆபீசுக்குப் போவோம், வா" என்று அழைத்தார், ஆவுடையப்ப பிள்ளை. அப்போது சம்பத்துக்கு எங்கும் போக மனமில்லை, நேரே தன்னுடைய அறையில் போய்ப் படுத்திருக்க வேண்டும் என்று எண்ணினான். நளினியை விருந்துக்கு அழைத்தாகி விட்டது. அவளும் சம்மதித்து விட்டாள். மாலை ஏழு மணி வசதியான நேரம்தான். அவனுடைய மனத்தில் உருவாகியிருந்த திட்டம் ஒழுங்காக நடைபெறுமானால்....

நளினியிடம்தான் அவன் மனம் சென்றது. அவளோ கொஞ்சம்கூட அசைவதாகத் தெரியவில்லை. எனவே இப்போது ஒரு முடிவு செய்திருந்தான். அந்த முடிவு எவ்வளவு பயங்கரமானது என்பதையும், அதனால் தனக்கு நேரக்கூடிய ஆபத்தையும், அவமானத்தையும் அவன் உணர்ந்திருந்தாலும் நளினியை அடைந்தே தீரவேண்டும் என்ற வெறி அவன் அறிவை மறைத்து விட்டது.

அவனுக்குத் தேவையானது நளினியின் கணவன் என்ற அந்தஸ்து. அந்த அந்தஸ்துக்குக் குறைவின்றி அவனால் நடந்து கொள்ள முடியும். விதி வசத்தால் ஏழைக் குடும்பத்தில் பிறந்து விட்டானே தவிர ஒரு பணக்காரப் பையனுக்கு இருக்க வேண்டிய எல்லா இயல்புகளும் அவனிடம் அமைந்திருந்தன. செல்வச் செழிப்புடன் வாழ ஆசைப்பட்டான்.

மறுநாள் நடக்கவிருந்த நிகழ்ச்சியைச் சாவதானமாகக் கற்பனையில் ஒத்திகை பார்க்க வேண்டும்என்று நினைத்திருந்தவனை ஆவுடையப்ப பிள்ளை அலுவலகத்துக்கு அழைத்ததும் திகைத்தான். அவருடைய அழைப்பை மறுக்க முடியாமல் அவருடைய காரில் ஏறினான்.

"உனக்கென்ன இன்றைக்கு இப்படிக் கோபம் வந்து விட்டது!" என்றார் ஆவுடையப்ப பிள்ளை.

"உங்களைத் திரும்பத் திரும்பக் கருணாகரன் குறை சொல்லிக் கொண்டே இருந்தார்" என்றான் சம்பத்.

"இருந்தாலும் நீ அப்படிப் பேசியிருக்கக் கூடாது. அவர் பொல்லாதவர். புரட்சிக் கட்சியைச் சேர்ந்த ரௌடி. அவரிடம் அடியாட்கள் உண்டு. அவரிடம் ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். அவர் உனக்கு ஏதாவது கெடுதல் செய்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் நான் மன்னிப்புக் கேட்டேன்" என்றார் ஆவுடையப்ப பிள்ளை.

* * *

கருணாகரன் கோபத்தில் கொதித்துக் கொண்டிருந்தார். ஏற்கனவே மனச் சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்தவருக்குச் சம்பத்தின் பேச்சு மிகுந்த கோபத்தை உண்டுபண்ணியிருந்தது. ஒரு ஜூனியர், தொழிலுக்கு வந்து இரண்டு வருடங்கள்கூட ஆகவில்லை, தன்னைப் பார்த்து அப்படிக் கேட்டு விட்டானே என்று பொருமினார். வக்கீல் சங்கக் கட்டடத்திலிருந்து வெளியேறியவர், காரில் ஏறித் தம்



# திருடர்கள்

ர.சு.நல்லபெருமாள்

முடைய அலுவலகத்துக்குச் சென்றார். அங்கு பஞ்சாயத்து போர்டு தலைவர் காத்திருந்தார்.

"டாக்டர் விஷயம் என்ன ஆயிற்று?" என்று ஆவலோடு கேட்டார், பஞ்சாயத்துத் தலைவர்.

"இன்னும் வழிக்கு வரவில்லையே. நிறையப் பணம் எதிர்பார்ப்பதுமாதிரி தெரிகிறது!"

",சார், இந்தக் கேஸுக்கு நிறையச் செலவு ஆகிவிட்டது."

"ஆகத்தான் செய்யும். கேஸில் பலமில்லை. அவனைத் தண்டிக்க வேண்டுமானால் சங்கடப்பட்டுத்தான் ஆக வேண்டும். டாக்டரின் கையில்தான் இருக்கிறது."

"ஏற்கனவே எழுநூறு ரூபாய் கொடுத்திருக்கிறேன்."

"எனக்கா கொடுத்தீர்கள்? பப்ளிக் பிராசிக்யூட்டருக்குக் கொடுத்தீர்கள். நீங்கள் கொடுத்த பணத்தை உடனே அவரிடம் கொடுத்தேன். பணம் போதாதென்று கோபப்பட்டார். நான்தான் சமாதானப்படுத்தினேன். நான் எதற்காக இதில் சிரமப்படவேண்டும்? உங்களோடு பழகிய தோஷத்துக்காகத் தலையிட்டேன். அவ்வளவுதான்" என்ற கருணாகரன் தொடர்ந்தார்: "இந்த வழக்கினால் எனக்குப் பைசா லாபம் கிடையாது. போதாக் குறைக்கு இந்தத் தலையீட்டினால் என்னுடைய மற்ற கேஸ்கள் வேறு பாதிக்கப்படுகின்றன. நேற்றுக் காலை முழுவதும் இந்தக் கேஸுக்காகக் கோர்ட்டில் இருந்தேன்."

"கோபப்படாதீர்கள், ஸார்! உங்களுக்கும் பீஸ் கொடுத்து விடுகிறேன்."

"நோ நோ... நான் பணத்தைப் பற்றியே பேசவில்லை. இந்த வழக்குக்கு உங்களிடம் எப்போதாவது நான் பணம் கேட்டிருக்கிறேனா? நட்புதான் பெரிதே தவிர, பணம் பெரிதில்லை" என்றார் கருணாகரன்.

"டாக்டர் எவ்வளவு கேட்கிறார்?"

"இரண்டாயிரம் ரூபாய் கேட்கிறார். நான் மறுத்து விட்டேன். கடைசியாக ஆயிரத்து ஐந்நூறு வேண்டுமானால் வாங்கித் தருகிறேன் என்று சொல்லியிருக்கிறேன். தமது சாட்சி

யம்தான் முக்கியமானது என்று தெரிந்து கொண்டு ஆசாமி வளைந்து கொடுக்க மறுக்கிறார்.''

''சரி சார், எப்படியாவது ஆயிரம் ரூபாயில் முடித்து விடுங்கள்.''

''நானே இரவு அவரைப் பார்க்கப் போகிறேன். கையில் பணத்தோடு போய்விட்டால் சரிக்கட்டிவிட முயலலாம்.''

''நாளைச் சாயங்காலம் ஐந்து மணிக்குப் பணத்தைத் தந்து விடுகிறேன். ஆயிரத்துக்குள் முடித்துவிடுங்கள். உங்களைத்தான் நம்பியிருக்கிறேன். ஒரு காரியத்தில் இறங்கியாகி விட்டது. அவனை ஜெயிலுக்குள் தள்ளினால் தான் எனக்குத் தூக்கம் வரும்'' என்றார், பஞ்சாயத்துப் போர்டுத் தலைவர்.

**வா**சலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. சற்று நேரத்தில் இன்ஷூரன்ஸ் இன்ஸ்பெக்டர் பூமிநாதன் அறைக்குள் வந்தார். அவரைக் கண்டதும் கருணாகரன், பஞ்சாயத்துத் தலைவரைப் பார்த்து, ''சரி, நாம் நாளை சந்திக்கலாம்'' என்றார்.

பஞ்சாயத்துத் தலைவர் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினார்.

''என்ன சார், விசேஷம்?'' என்றார் கருணாகரன்.

''நேற்று மிஸ்டர் ராகவனின் காரில் ஏற்பட்ட விபத்து விஷயமாகத்தான்'' என்றார் பூமிநாதன்.

''ஓ...ஃ.உங்கள் கம்பெனியில்தானே இன்ஷூர் ஆகியிருக்கிறது?''

''ஆமாம். ஆஸ்பத்திரியில் பையனைப் பார்த்தேன். பையனுடைய தகப்பனார் என்ன பேசினாலும் உங்களிடம்தான் கேட்க வேண்டும் என்கிறார்'' என்றார் பூமிநாதன்.

''இல்லையென்றால், நீங்கள் ஆளையே விழுங்கி விடுவீர்களே!''

''ஓ....ஹோ...'' என்று உரக்கச் சிரித்தார் பூமிநாதன். ''சரி, விஷயத்துக்கு வருவோம். நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?''

கருணாகரன் சற்று யோசித்தார். ''பையனைப் பார்த்தீர்கள் அல்லவா?''

பூமிநாதன், தலையை ஆட்டினார். ''எவ்வளவு கொடுக்கலாம் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார், கருணாகரன்.

''டாக்டரிடம் கேட்டேன். உயிருக்கு ஆபத்தில்லை.''

''ஆனால் கை கால் விளங்காமல் போய் விடுமே?''

''சிறு பையன்தான்.''

''அந்தப் பையனை நம்பித்தான் அந்தக் குடும்பமே இருக்கிறது. அவன்தான் சம்பாதித்துப் போட வேண்டும்.''

''சரி, நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?''

''முதலில் நீங்கள் எவ்வளவு என்று சொல்லுங்கள்.''

''மூவாயிரம். உடனே செட்டில் பண்ணி விடலாம்.''

''சரி, நான் கோர்ட் மூலம் நஷ்ட ஈட்டை வாங்கிக் கொள்கிறேன்..''

''கோர்ட் கிர்ட் என்று ஒன்றும் வேண்டாம் என்பதற்காகத்தானே ஸார் உங்களை நேரில் வந்து பார்க்கிறேன்?''

''பதினையாயிரத்துக்கு வழக்குப் போட உத்தேசித்திருக்கிறேன்.''

''அடேயப்பா!''

''என்ன அடேயப்பா! உங்கள் பையிலிருந்தா பணத்தை எடுத்துக் கொடுக்கப் போகிறீர்கள்? இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிதானே கொடுக்கப் போகிறது?''

''அது சரி. கோர்ட் பதினையாயிரத்துக்குச் சம்மதிக்காதே.''



''ஏன் சம்மதிக்காது? அந்தக் குடும்பத்துக்கு அவன் ஒரே பையன். இது ஒன்றே போதுமே.''

''சரி, நான் கடைசியாக ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா? கோர்ட்டுக்கெல்லாம் போக வேண்டாம். நாம் இரண்டு பேரும் ஒரு முடிவுக்கு வந்து விடுவோம்.''

''என்ன சொல்லுங்கள்.''

''பதினாயிரத்துக்கு முடித்து விடலாம். எனக்கு மூவாயிரம்'' என்றார் பூமிநாதன்.

கருணாகரன் யோசித்தார். பூமிநாதன் சொன்னார்: ''நீங்கள் யோசிக்க வேண்டாம். கம்பெனிக்குச் சிபாரிசு செய்து பதினாயிரத்துக்கு செட்டில் பண்ணச் சொல்கிறேன். கோர்ட் மூலமாகப் போனால் எனக்கு லாபமில்லை.''

''உங்களுக்கு மூவாயிரம் கொடுத்துவிட்டால் பாக்கி ஏழாயிரம்தானே இருக்கிறது. பாவம், அந்தக் கிழவர் அதற்குச் சம்மதிக்க வேண்டுமே.''

''நீங்கள் நினைத்தால் அவரைச் சம்மதிக்க வைத்துவிடலாம். கோர்ட்டுக்குப் போனால் இதுகூடக் கிடைக்காது என்று சொன்னால், சம்மதிப்பார்.''

''அதுசரி. எனக்குத்தான் ஒன்றுமில்லை'' என்றார், கருணாகரன்.

பூமிநாதன் சிரித்தார். ''உங்களுக்குத்தான் கிழவர் வக்கீல் பீஸ் கொடுப்பாரே'' என்று புகையை ஊதினார், பூமிநாதன்.

''ப்பூ... வக்கீல் பீஸ் எவ்வளவு கொடுத்து விடப் போகிறார்?'' என்று உதட்டைப் பிதுக்கினார், கருணாகரன்.

''நான் உங்களுக்கு ஐந்நூறு கொடுத்து விடுகிறேன். எனக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு போதும்'' என்றார், பூமிநாதன்.

கருணாகரன் யோசனையில் ஆழ்ந்தார். பூமிநாதனை நோக்கி, ''கம்பெனிக்கு என்ன எழுதுவீர்கள்?'' என்று கேட்டார்.

''பையனுக்குப் பலத்த அடி. ஒரே பையன். கோர்ட் மூலமாக இருபதினாயிரத்துக்கு வழக்குத் தொடர இருக்கிறது. எதிராளியின் வக்கீலுடன் கலந்து கொண்டு கோர்ட்டுக்குப் போகாமல் பதினாயிரத்துக்கு செட்டில் பண்ணிவிடலாம் என்று எழுதுவேன். இந்த விபத்தில் நேர்ந்த நஷ்டத்துக்குப் பதினாயிரம் குறைந்த தொகைதான் என்று எழுதுவேன்.''

''சரி! அப்படியே எழுதுங்கள்!''

பூமிநாதன் சென்றதும் கருணாகரன், ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தார். கருணாகரனைக் கண்டதும் சிறுவனின் தந்தை மரியாதையுடன் எழுந்து நின்றார்.

''காலையில் ஜட்ஜைப் பார்த்தேன். பேசிக் கொண்டிருந்தேன். இந்தப் பையனைப் பற்றியும் சொன்னேன். இரண்டாயிரம் ரூபாய்க்குகேஸ் போடப் போவதாகவும் சொன்னேன்.'' கருணாகரனின் பொய்யை நம்பிய கிழவர், கும்பிட்டுக் கொண்டே சொன்னார்: ''ஜட்ஜ் ஐயா என்ன சொன்னார்கள்? மூவாயிரம் தரும்படி நீங்கள் சிபாரிசு செய்ய வேண்டும்.''

''ஜட்ஜ் பொல்லாத ஆள். சிறு பையனுக்கெல்லாம் ஆயிரம் ரூபாயே அதிகம் என்கிறார். நான் எவ்வளவோ சொன்னேன். யோசிப்போம் என்கிறார். நாம் கேஸைப் போட்டால் ஜட்ஜ் ஆயிரத்துக்கு மேல் கொடுக்க மாட்டார் போலிருக்கிறது.''

''சாமி, நான் ஏழை... ''

''அதற்கு நான் ஒரு வழி செய்து விட்டேன். கோர்ட்டுக்குப் போகாமல், இன்ஷூரன்ஸ் கம்பெனி மூலமாக இரண்டாயிரம் ரூபாய் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

''நீங்கள் கடவுள் மாதிரி...''

''யாராவது வந்து பண விஷயமாகப் பேச ஆரம்பித்தால் நீங்கள் வாயைத் திறக்காதீர்கள். வக்கீல் கருணாகரன் இல்லாமல் எதுவும் பேச மாட்டேன் என்று சொல்லி விடுங்கள். உங்களை ஏமாற்றி விடுவார்கள்.''

'' ஐயாவுக்கு ஃபீஸ்...?''

''சேச்சே... அந்தப் பணத்தில் ஒரு பைசா கூட நான் தொடக்கூடாது. அது இவன் பணம்'' என்று கூறி, படுக்கையிலிருந்த சிறுவனின் தலையைத் தடவினார், கருணாகரன்.

''அதெல்லாம் இல்லை சாமி. நீங்கள் இல்லையென்றால், இந்தப் பணம் ஏது? நீங்கள் தட்டக் கூடாது. ஐந்நூறு ரூபாய் எடுத்துக்கொள்ளுங்கள். ஆயிரத்து ஐந்நூறு எங்களுக்குக் கிடைத்தால் போதும்.''

''அதையெல்லாம் பிறகு பார்த்துக்கொள்வோம். முதலில் இவன் குணமாகி எழுந்திருக்க வேண்டும். ஆஸ்பத்திரிச் செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி ஐந்து ரூபாய் நோட்டுக்கள் இரண்டை நீட்டினார்.

''எதற்கு சாமி, இது?''

''பரவாயில்லை. வாங்கிக் கொள்ளுங்கள். உங்களோடு பழகி விட்டேன். உதவி செய்ய வேண்டியது என் கடமை.''

கிழவர் பணத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டார். ஆஸ்பத்திரியை விட்டுக் கருணாகரன் வெளியே வந்தபோது உற்சாகமாயிருந்தார். அவ் விபத்தின் லாபத்தை மனசில் கணக்குப் போட்டு பார்த்தார். (தொடரும்)



# நமக்கினி பயமேது?

## கீர்த்தனைக் கதை-6

எப்பவும் இருந்து கொண்டே இருக்கிறது. உங்களிடம் எப்படிக் கேட்கிறது ? கேட்டால் 'புர்' என்று மூக்குக்கு மேலே கோபம் பொத்துக் கொண்டு வந்துவிடுகிறது '' என்றாள்.

''கோபிச்சுக்கலே. என்ன சொல்லேன் ?''

'' பத்திரிகையிலே ஒவ்வொரு நாளும் 'அங்கே கறுப்புப் பணம் பிடித்தார்கள். இங்கே தங்கத்தைக் கண்டெடுத்தார்கள்' என்று படிக்கும்போதெல்லாம், நீங்கள் இப்படிப் படாடோபமாக வீடும், வாசலுமாய் இருக்கிறீர்களே, யார் எதையாவது வயிற்றெரிச்சலிலே சொல்லிவிடப் போகிறார்களோஎன்று எனக்குத் தூக்கமே வருகிறது கிடையாது'' என்று அவள் கவலையைத் தெரிவித்தாள்.

'' மாட்டினடா ஜெயில்தான் ; இல்லேன்னு குஷால்தான். வாழ்க்கையிலே, பிரேமா துணிவு இருக்கணும். நான் இருநூறு ரூபாய் வேலையை விட்டேன். அன்னிக்கும், 'இப்படி வேலையை விட்டுவிட்டேன் என்கிறீர்களே!' என்று பயந்தாய். இன்று வசதியோடு வீடு கட்டுகிறோம். எப்படி வந்தது ? துணிவுதான். வேலையை விடவேன்னு ஒண்டிக் குடித்தனம் பண்ணுவே. கார், நகை, ஏர்கண்டிஷன், கந்றுலா இதெல்லாம் எப்படி வரும் ?'' என்று வாழ்க்கையில் முன்னுக்கு வரத்தேவையான துணிவைப் பற்றி ஒரு பிரசங்கம் செய்தான்.

''இப்ப வந்துவிட்டது. மார் தட்டுகிறீர்கள். வியாபாரம் நசித்து இருக்கட்டும்...''

''பயப்படுகிறவனுக்கு எல்லாம் பயம் தான். 'சாகப் போகிறவனுக்குச் சமுத்திரம் கணுக்கால் ஆழம்'னு சொல்லுவா. அந்த மனப்பான்மை இருக்கிறவன்தான் சமுத்



''போன காரியம் என்ன ஆச்சு?'' என்று பிரேமா கேட்டுக் கொண்டே கணவன் சுழற்றிக் கொடுத்த பூட்ஸை வாங்கிக் கொண்டாள்.

''பிடிக்கிறவனைப் பிடித்தால் எந்தப் புலிப் பால்தான் கறந்து கொண்டு வர முடியாது ? மூன்று டன் சிமிட்டிக்குத்தான் பெர்மிட். இன்னொரு கண்டிராக்டர் சிநேகிதரைப் பார்த்தேன். அவரிடம் ஒரு டன் சிமெண்ட் இருக்கிறதாம். அதையும் வாங்கிவிட்டேன். வீடு ஜாம், ஜாம் என்று முடித்து கிருஹப்பிரவேசம் செய்யலாம்'' என்றான் நாராயணன்.

'' இதெல்லாம் சந்தோஷமாய்த்தான் இருக்கு. ஆனால் கூடவே எனக்கு ஒரு பயம்

நிரத்தில் மூழ்காமல் கடக்கிறவன்'' என்று தன் சித்தாந்தத்தை எடுத்துக் கூறினான்.

வாசலில் ஏதோ சண்டை போடும் சத்தம் கேட்டது. பிரேமாவும் நாராயணனுமாய் ஜன்னல் வழியாகப் பார்த்தனர். எதிர் வீட்டுக்காரரை எவனோ ஒருவன் வாய் நிரத் திட்டிக் கொண்டிருந்தான்.

''எல்லாருக்கும் மேலே கடவுள் ஒருத்தன் இருக்கிறான்..... மறந்துவிடாதே... இன்னிக்கு நீ காரிலே போகலாம்.... மாடி வீடு கட்டிக்கலாம்.....ஏழை வயிற்றில் அடித்தால் அதற்கு அனுபவிப்பே..... உன் குழந்தை குட்டிங்க சௌக்கியமா இருக்குமா ? இன்னிக்கு இல்லேன்னு ஒரு நாள் அனுபவிப்பாய். இந்த ஜன்மத்திலே இல்லேன்னாலும் மறு பிறப்பிலே அனுபவிப்பே...''

''என்னென்ன பேசறான் பார்த்தீங்களா?'' என்றாள் பிரேமா.

''உனக்குப் பயம் வந்துவிட்டது. அது தானே! எதிர்வீட்டவருக்குச் சாபம் கொடுத்தது போல் நமக்கும் எவனாவது சாபம் கொடுத்துவிடப் போறானே என்ற பயம். அதானே'' என்று அவளை நையாண்டி செய்தான்.

''உங்களுக்குத்தான் மனுஷ்யனிடத்திலும் பயமில்லே, தெய்வத்தினிடமும் பயமில்லே'' என்றாள்.

''எடுத்ததுக்கெல்லாம் அடுத்த ஜன்மம், பரலோகம்னு பார்த்துக் கொண்டே போனால் வாழ்க்கையே வாழ்ந்த மாதிரிதான். பரலோகத்திலே கஷ்டம் வரபோது பார்த்துக்கலாமே. அதுக்கு இப்பப்பிடித்து மூக்கைச் சிந்திப் போட்டுக் கொண்டிருப்பானேன் !''

''ஒரு தப்புக் காரியம் பண்ணிவிட்டேன்'' என்று மன்னிப்புக் கோரும் பாணியில் சொன்னாள்.

''என்ன தப்பு? பரலோகத்திலே கஷ்டப் படப் போறே?'' என்று கிண்டல் செய்தான்.

''எதிர் வீட்டு மாமிக்கு யாரோ சிங்கப்பூரிலேயிருந்து வந்தவா ஐந்நூறு நைலக்ஸ் புடவைகள் கொண்டு வந்தார்களாம். நம் ஆத்துக்கு வேணுமான்னு கேட்டுக்கொண்டு வந்து புடவைகளையும் காண்பித்தா. ரீடாவுக்கு ரொம்பவும் பிடித்துவிட்டது. நானு புடவைகள் எடுத்துண்டோம். ஐந்நூறு ரூபாய்தான்..... நன்னா இல்லே?'' என்று புடவைகளைப் பிரித்துக் காண்பித்தாள்.

''நன்னாய்த்தான் இருக்கு.''

''ரீடா ! அப்பாவே நன்னா இருக்குன்னு சொல்லிட்டார்'' என்று தாய் சொல்ல ரீடா ஓடி வந்து அப்பாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு, வழுக்கைத் தலையைத் தடவி, ''அப்பா ! உனக்குத் தலே ரொம்பவும் வழுக்கையாய்ப் போச்சு !'' என்று கூறி இடி இடி என்று சிரித்தாள்.

''எல்லாம் உன்னாலேதான்'' என்று பெண்ணின் கன்னத்தைச் செல்லமாய்க் கிள்ளினார்.

காலிங் பெல் ஒலித்தது. கதவைத் திறந்தாள். பாட்டு வாத்தியார் ஹாலில் நுழைந்தார். விறுவிறு என்று போய்ப் பாயை விரித்து, தம்பூராவை எடுத்து வந்து வாத்தியாரிடம் கொடுத்து எதிரில் ரீடா அடக்கமாய் உட்கார்ந்தாள்.

''புதுப் பாட்டைப் பாடம் பண்ணிவிட்டாயா ?'' என்று வாத்தியார் கேட்டுக் கொண்டே தம்பூராவை மீட்டி முதலில் ஆரம்பித்தார். அதையொட்டி ரீடா மந்தாரி ராகத்தில் தியாகையர் கீர்த்தனையைப் பாடினாள்:

பல்லவி

பரலோக பயமுலேகதே பவபாச பத்துலேரு

அனுபல்லவி

ஸிரிவாஜி சிருங்காரா ராம சிபி
காதுலெல்ல மனகே கவிகேனனி

சரணம்

கொன்ன காத்தலனு கோண பிட்டலனு
வன்னே சீரலனுவான குடிலனு
இன்னகா கனி தைவ லோகமனி
தன்னுகோன்னலோ தியாகராஜனுத

(பரலோகத்தைப் பற்றிய பயமே இல்லாமல் இல்வாழ்க்கையில் பெருமையடைந்து சம்சாரத்தில் உழல்கின்றனர் மக்கள். வீடு, சொத்து, ஆடை, பெண்ணாசை இவைகளில் மகிழ்ச்சியடைந்து 'இதுவே தெய்வலோகம்' என்ற மயக்கத்தில் பரலோக பயமின்றி வாழ்கின்றனர்.)

## பாட்டின் லட்சணங்கள்

'லோகாவனா சதுர ஸுதாசமு' என்ற கிருதியில் ஒருகிருதியின் லட்சணங்கள் என்னவென்று ஸ்ரீ தியாகையர் தெளிவு படுத்துகின்றார். உபநிஷதுக்கள் கூறும் சத்தியமே பாட்டின் உட்பொருளாக இருக்க வேண்டும்; அதன் இசை வடிவத்தில் ஸ்வர சுத்தமே முதலிடம் கொள்ள வேண்டும்; கவி வடிவத்தில் அதன் போக்கு விச்ராந்தியான கதியில் இருத்தல் வேண்டும். தோல் உரிக்கவும் அவசியமின்றி அப்படியே வாயில் போட்டுக் கொள்ளும் திராட்சா ரசமாக ஒன்பது ரஸங்களும் வெளிப்பட வேண்டும். ஆயினும் இவை அனைத்தும் பக்தி என்பதிலேயே தோய்ந்திருக்க வேண்டும். அந்தப் பக்தி வெறும் உணர்ச்சி பரவசமாய் இராமல் வைராக்கியத்துடன் கூடியிருக்க வேண்டும்.




''நான் சொல்லி அந்த நாதஸ்வரக்காரரை வாசிக்கவைச்சேன். வாசிக்கட்டும் பிரமாதம், பிரமாதம்னு சொன்னார்.''

''தம் வாசிப்பைத் தாமே பிரமாதம்னு சொல்லிண்டாரா?''

''நீங்க எதைச் சொல்றேள்? நான் எழுதின நாவலை அவரை வாசிக்க வைத்தேனாக்கும்!''



சென்ற 27 ஆண்டுகளாய் பெட்ரோலியம், மண்ணெண்ணெய் போன்ற பொருள்கள் விநியோகத்தின் பல்வேறு நிலைகளில் பரந்த அநுபவம்பெற்ற திரு T. குமாரன், இண்டியன் ஆயில் கார்ப்பரேஷனின் விநியோகத்துறை பிரிவுக்கு உயர் மானேஜராக நியமனம் பெற்றிருக்கிறார். இவ்விநியோகப் பணியை ஏற்பதற்கு முன்அவர் பம்பாயின் ஓர் தினப் பத்திரிகையின் உதவி ஆசிரியராகப் பணி புரிந்திருக்கிறார்.

திரு குமாரன், பெட்ரோலியம், மண்ணெண்ணெய் விநியோகத்துறையில் சாதாரண வியாபாரப் பிரதிநிதியாகச் சேர்ந்து தனது திறமையால் ஜெனரல் மானேஜர் பதவிக்கு வந்திருக்கிறார். அவர் திறமை செறிப்பதாக!



கரூர் D. S. M. பஸ் டிரான்ஸ்போர்ட்ஸ் உரிமையாளர் ஸ்ரீ D.S. மணி ஐயர் பேத்தியும் ஸ்ரீ G. கிருஷ்ணசாமி அவர்களின் புதல்வியுமான K. லலிதா B. Sc.க்கும், ஸ்ரீ S. N. வைத்தியநாதன் (Retired Veterinary Officer) அவர்கள் குமாரர் Dr. S. V. வெங்கட்டராமன் M. B. B. S.க்கும், கரூர் நாரதகான சபாவில் 21-11-74 அன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு உறவினர்களும், நண்பர்களும் ஏராளமாக வந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்





மக்களின் அமோக ஆதரவையும், நம்பிக்கையையும் பெற்று விளங்குவது

# ஆர்.எஸ்.பதிமருந்து

(REGD.)

**தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, கைகால் வலி**

முதலியவைகளுக்குச் சிறந்த மருந்து

○ டிரக் லைசென்ஸ், சேல்ஸ் டாக்ஸ் லைசென்ஸ் உள்ள வணிகர்கள் எங்களுக்கு நேரடியாக ஆர்டர் எழுதலாம்

## ஆர். எஸ். பதி அன் கோ.

214 & 215, மேல மாசி வீதி,
த. பெ. எண்: 99
**மதுரை-1**

—ராஜன்


Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications

# நாட்டிலுள்ள செயல்திறனை மேலும் சீராக்கி நாட்டின் வளத்தை மேம்படுத்துவதையே தனது குறிக்கோளாகக் கொள்வதன்றோ ஒருவரது மேதாவிலாசத்திற்குச் சான்று!



பல ஆண்டுகளுக்கு முன்பே—அதாவது 1890லேயே இந்தியாவின் ஏழ்மை நிலைக்குக் காரணம் வாய்ப்பின்மை என்பதை ஜெம்ஷேட்ஜீ டாடா உணர்ந்தார்.

அவ்வாய்ப்புகளை அளிப்பதற்கென்றே 1921ல் ஜெம்ஷேட்பூர் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் துவங்கப் பட்டது. கடந்த ஐம்பத்து மூன்று ஆண்டுகளாக நாட்டின் நற்பணிக்காக மிகச் சிறந்த எஃகுத்துறை நிபுணர்கள், தலைசிறந்த இந்தியத் தொழில்நுட்ப அதிகாரிகள், எஞ்ஜினீயர்கள் மற்றும் டெக்னீஷியன்கள் இங்கு பயிற்சி பெற்றுள்ளனர். இவர்கள் இந்தியாவின் பொதுத் துறையிலுள்ள நிறுவனங்களாகிய ஹிந்துஸ்தான் ஸ்டீல், பொகாரோ ஸ்டீல் மற்றும் ஹெவி எஞ்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் இவற்றிலும் டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனியிலும் பணி புரிகின்றனர்.



டாடா ஸ்டீல்

HT-TIS-7354 A

